உ

கடவுள் துணை.

உ-ஆம் பாகம்.

# நீதிமஞ்சரித் திறவுகோல்.

இஃது

சிந்தாதிரிப்பேட்டை

வித்துவான

பு. தெய்வசிகாமணி முதலியாரால்

செய்து

சென்னை,

மிமோரியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

1878.

V. Sourirajaloo

உ

# கடவுள் துணை.

உ-ஆம் பாகம்.

# நீதிமஞ்சரித்திறவுகோல்.

---

மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார்

இயற்றிய

## இனியவை நாற்பது.

**1.** யானை உடைய-யானைகளையுடைய, படை-சேனையை, காண்டல் - காணுதல், மிக இனிது ஏ - மிகவும் இனியதே யாம், ஊனை (வேறோர் உயிரின்) தசையை, தின்று - ஊனை (தனது) உடம்பை, பெருக்காமை - பருக்கச் செய்யாமை, முன் இனிது ஏ (எல்லா அறங்களிலும்) முற்பட்ட இனிய அறமே யாம். கானயாறு-காட்டாற்றினது, கரை-கரையை, அடை - சேர்ந்த, ஊர் - ஊரானது (பலவளங்களையுந் தருதலால்) இனிது ஏ (வசிப்பவர்க்கு) இன்பந்தருவதே யாம். மானம் உடையார் - மானத்தையுடையவரது, மதிப்பு-நன்கு மதித்தல், ஆங்கு (அது) போல, இனிது ஏ (அவரால் நன்கு மதிக்கப்பட்டவர்க்கு) இனியதே யாம்.

மானம் என்னகுறைவரினுந் தமது நிலையினின்று தவறாதிருத்தல். சேனைக்கு அழகு யானை ஆதலால் யானையுடைய படைகாண்டல் இனிது என்றார். "படை தனக் கியானை வனப்பாகும்" எனப்பிறர் கூறல்காண்க. "கானயாற்றிடை யிட்டவூரின்று" எனப்பிறர் கூறுதலால் கானயாற்றடை

கனா ஊரினிது என்றார். படை, பெருக்காமை, ஊர், மதிப்பு எழுவாய், இனிது பயனிலை. ஊன் தசையாகிய காரணம் தன்னாலாகிய உடம்பின்மேல் நிற்றலால் காரண வாகுபெயர். காண்டல் மதிப்பு உடன்பாட்டுத் தொழிற் பெயர்கள் காண்பகுதி, தல்விகுதி, தகரம் டகரமாகத் திரிதல் சந்தி. மதி பகுதி, ப் சந்தி, பு தொழிற்பெயர்விகுதி. பெருக்காமை எதிர்மறைப்பிறவினைத்தொழிற்பெயர் பெருக்கு பிறவினைப்பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, மைதொழிற்பெயர் விகுதி. இது தின்று என்னும் இறந்தகால வினையெச்சத்தின் பயனிலை யாய்நின்றது. தின் பகுதி, ற் இறந்தகாலவிடைநிலை, உ எச்ச விகுதி. இனிது. பண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற்படர்க் கைக் குறிப்பு வினைமுற்று. இனிமை பகுதி, ஈறுகெடுதல்சந்தி, து ஒன்றன்பால் விகுதி. எடுத்துக்கொண்ட ஒவ்வொரு பொருள்களும் சிறந்தன ஆதலால் மற்றையவற்றி னின்று பிரிந்துக் கூறுதலின் ஏ பிரிநிலை. பின் வருவனவற்றிற்கும் இவ்வாறுகொள்க. (க)

2. சொல்லாமை (ஒருயிரையும்) கொலை செய்யா திருத்தல், முன் இனிது (எல்லா அறங்களிலும்) முற்பட்ட இனிய அறச்செய்கையாம். மா - பெரிய, ராயன் - அரசன், கோல் கோடி - நீதிதப்பி, செய்யாமை (அரசியல்)[1] நடத்தாமல், செங்கோலன் ஆகுதல் - செங்கோலையுடையனாதல், முன் இனிது. எய்தும் திறத்தால் (தன்னால்) கூடிய வகையால், யார் மாட்டும் - யாவரிடத்தும், பொல்லாங்கு - தீயசொற் களை, உரையாமை - பேசாதிருத்தல், நன்கு இனிது-மிகவும் இனியது.

மாராயன் எனப் பாடங்கொள்க. கொல்லாமை, ஆதல், உரையாமை எ. இனிது ப. கொல்லாமை, உரையாமை எதிர்மறைத் தொழிற்பெயர்கள், கொல்பகுதி, ல் சந்தி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, மை விகுதி. உரைபகுதி, ய் சந்தி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, மை விகுதி. கோடி இறந்தகால வினையெச்சம் கோடு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி. செய்யாமை எதிர்மறை வினையெச்சம் செய் பகுதி, ய் சந்தி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒரு பகுதி, மைஎச்சவிகுதி. இவ்வெச்சம் செங்கோலன் என்னுங்குறிப்பு வினைமுற்றைக் கொண்டது. உம்மை முற்று. என்ப அசைநிலை. (உ)

3. ஆற்றும் துணை ஆல் - (தமக்கு) கூடிய அளவினால், அறம் - தருமத்தை, செய்கை - செய்தல், முன் இனிது ஏ- (எல்லா நற்செய்கைகளிலும்) முற்பட்ட இனிய நற்செய்கையேயாம். பால்பட்டார் - (நன்னெறியின்) வழிப்பட்டவர், கூறும் - சொல்லுகின்ற, பயம்மொழி - பயனுடையசொல்லினது, மாண்புஇனிது ஏ-மாட்சிமையினியதேயாம். வாய்ப்புஉடையார் ஆகி - (எல்லா நற்குணங்களையும்) பொருந்துதலுடையவராகி - வலவைகள் அல்லாரை-நாணத்தக்க அலிகளல்லாதவரை, காப்பு(தனக்கு)காவலாக,அடைய-பொருந்த, கோடல் (ஒருவன்) கொள்ளுதல், இனிது ஏ - இன்பந்தருவதே யாம்.

செய்கை, மாண்பு, கோடல் எ. இனிது ப. செய்கை, கோடல், வாய்ப்பு, காப்பு தொழிற்பெயர்கள் - செய்பகுதி, கை விகுதி. கொள் பகுதி, முதல் நீளுதல் விகாரம், ளகரக்கேடுந் தகரத் திரிபும் சந்தி, தல்விகுதி. வாய் பகுதி, ப்

சந்தி, பு விகுதி. கா பகுதி, ப் சந்தி, பு விகுதி. மாண்பு பண்புப்பெயர் மாண்பகுதி, பு பண்புப்பெயர்விகுதி. ஆகி இறந்தகால வினையெச்சம் ஆகு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி இவ்வெச்சம் அல்லார் என்னும் எதிர்மறைக்குறிப்பு வினைமுற்று லணையும்பெயர் கொண்டது. ஈற்றில் ஏகாரந் தொகுததல்.

**4.** தம் கண் - தம்மிடத்து, அமர்வு உடையார் தாம்-விருப்பமுடையவா தாம், வாழ்தல் - செல்வமுடையவராகுதல், முன இனிது ஏ - முறபட்ட இனிய செய்கையே யாம். அம் - அழகிய, கண் இடம் (பரந்த) விசும்பு இன்-ஆகாயத்தினிடத்தில், அகல் நிலா - (ஒளி) பரந்த சந்திரனை, காண்பு இனிது ஏ - காணுத லினியதேயாம். பஙகம் இல் - குற்றமில்லாத, செய்கையர் ஆகி-செயகைனயயுடையவராகி, பரிந்து-இரங்கி, யார்க்குஉம்-யாவரிடத்தும, அன்பு உடையர் ஆதல்-அன்பையுடையவராகுதல், இனிது ஏ - இனியதே யாம்.

வாழ்தல், காண்பு, ஆதல் எ. இனிது ப. அமர்வு, காண்பு தொழிற்பெயர்கள். அமா பகுதி, வ் சந்தி, உ விகுதி. காண பகுதி, பு விகுதி. பரிந்து இறநதகால வினையெச்சம் பரி பகுதி, ந் சந்தி, த் இறந்தகாலவிடைநிலை, உஎச்சவிகுதி. இவ்வெச்சம் உடையர் என்னுங் குறிப்பு வினைமுற்றோடு முடிந்தது. கு உருபு மயக்கம். உம்மைமுறறு. நிலா ஆகாரங் குறுகி நில எனவும், உகரச்சாரியை பெற்று நிலவு எனவும் வழங்கும். (ச)

**5.** கடம் - கடன் (வாங்கி,) உண்டு-புசித்து, வாழாமை-(உயிர்) வாழாதிருத்தலே, காண்டல் - காணுதல், இனிது ஏ-இனியதேயாம். நிறை - கற்பினால், மாண்பு இல்-மாட்சிமை

யில்லாத, பெண்டிரை - மனைவியரை, நீக்கல் - (ஒருவன் னினின்று) நீக்கிவிடுதல், இனிது ஏ - இனியதேயாம். மனம் - மனத்தில், மாண்பு இலாதாரை - மாட்சிமை யில்லாதவரை, அஞ்சி - பயந்து, அகல்தல் - நீங்குதல், எனை மாண்பு தான் - எவ்வகைப்பட்ட நற்செய்கையினும், தனக்கு இனிது ஏ - மிக வினியதேயாம்.

காண்டல், நீக்கல், அகறல் எ. இனிது ப. கடம் கடனை என ஈற்று மகரம னகரமெய்யோ டொத்து இறுதி நிலைப் போலியாகப் பெரும்பாலும் வழங்கும். நிறை தீயவழியிற் செல்லவிடாது மனத்தை நிறுத்தல இதுகற்பினமேல் தொழி லாகுபெயராய் நின்றது - நிறு பகுதி, உகரககேடு சந்தி, ஐ தொழிற்பெயர் விகுதி. பெண்டிர் பலர்பாற் படர்க்கைப் பெயர்ச்சொல் பெண்டு பகுதி, உகரககேடு சந்தி, இர பலர் பால்விகுதி. உண்டு, அஞ்சி இரண்டும செயபபடுபொருளை குன்றாத இறந்தகால வினையெச்சங்கள் - உண்பகுதி, ட் இறந் தகாலவிடைநிலை, உ எச்சவிகுதி. அஞ்சு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி. (ரு)

6. குழவி (தனது) பிள்ளைகள், பிணி இன்றி - நோயில்லாமல், வாழ்தல் - வாழ்ந்திருத்தல், இனிது ஏ (ஒருவனுக்கு) இனியதே யாம். சழறும் - உரத்துப் பேசுகின்ற, அவை - சபையோ ரை, அஞ்சான் - அஞ்சாத (ஒருவன் கூறும்) கல்வி இனிது ஏ - கல்வி யினியதேயாம். மயலிகள் அல்லர் ஆய் - மயக்க முடையவர்க ளல்லராய், மாண்பு உடையார் - நற்குணம் நற்செய்கை யுடையவர்களை, சேரும் - அடையும், திரு உம் - செல்வமும, தீர்வு இன்றேல் - நீங்காதாயின் (அச்செல்வம்) இனிது ஏ - இனியதேயாம்.

வாழ்தல், கல்வி, திரு எ. இனிது ப. அஞ்சான் வினை முற்று எச்சமாய் நின்றது. கழறும் பெயரெச்சம் கழறு பகுதி, உகரக்கேடு சந்தி, உம் எச்சவிகுதி இது நிகழ்காலத் தின்மேல் நின்றது. மயலி உயர்திணை ஆண்பாற் படர்க்கைப் பெயர்ச்சொல் மயல் பகுதி, இ பெயர்ப்பொருள் விகுதி. இது பலர்பால்விகுதி யேற்று நிற்றலால் ஒருமையிற்பன்மை வந்த வழுவமைதி. உம்மை உயர்வு சிறப்பு. மாண்புடை யார்சசேரும். இரண்டாம் வேற்றுமைத்தொகை யாதலால் வருமொழி வல்லெழுதது மிக்கது. (௬)

7. மானம் (தனது) மானம், அழிந்த பின் - கெட்டபின்பு, வாழாமை - உயிர் விடுதல், முன் இனிது ஏ - முற்பட்ட இனிய செய்கையே யாம். தானம் - (தானிருந்து வாழும்) இடம், அழியாமை - கெடாமல், தான் அடங்கி - தானடக்க முடையவனாய், வாழ்வு இனிது ஏ - வாழ்தல் இனியதே யாம. ஊனம் ஒன்று - குறறமாகிய ஒருசெயல், இன்றி- இல்லாமல், உயர்நத பொருள் உடைமை - உயாநத பொருளையுடைத்தாதல், மானிடவர்க்கு எல்லாம் - எல்லா மனிதர் களுக்கும், இனிது ஏ - இனியதேயாம்.

உயாநத பொருளுடைமைஎனப்பாடங்கொள்க. வாழாமை, வாழ்வு, உடைமை எ. இனிது ப. அழிந்த இறந்தகாலப பெயரொச்சம அழி பகுதி, ந் சநதி, த் இறந்தகாலவிடைநிலை, அ எச்ச விகுதி. அடங்கி இறந்தகால வினையெச்சம அடங்கு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி. உடைமை குறிப்பு வினைத்தொழிற்பெயர்-உடைடமை பகுதி, ஈறு கெடுதல் சாதி மை தொழிறபெயர் விகுதி. எல்லாம என்பதன் இறுதியில, முற்றும்மை தொகுத்தல். (எ)

8. குழவி (தனது) மக்களது, தளர் நடையை - தளர்ந்து நடக்கும நடையை, காண்டல் - காணுதல், இனிது ஏ - இனியதேயாம். அவர் - அம்மக்களது, மழலை - மழலைச்சொல்லை, கேட்டல் - கேட்குதல், அமிழ்து இன் - அமுதம்போலும், இனிது ஏ - இனிய சுவையை யுடையதேயாம். வினை உடையான் - ஒருதொழிலையுடையவன, வநது அடைநது - வந்து சேர்நத, வெய்துறும் போழ்து உம் - (தன்னிடதது) மனம் வருந்துங் காலத்தும், மனன் - (தன்) மனத்தில், அஞசான் ஆகல் - அச்சமில்லாதவனாகியத்தொழிலில் முயலுதல், இனிது ஏ - இனியதேயாம்.

காண்டல், கேட்டல், ஆகல் எ - இனிது ப. இன் ஒப்புப் பொருளில்வநத ஐந்தாம் உருபு. மனம் மனன் இறுதிநிலைப போலி. வந்து என்னும் இறநதகால வினையெச்சம் அடைந்து என்னும் இறநதகால வினையெச்சத்தையும், அவ்வெச்சம் வெய்துறும் என்னும் பெயரொச்சத்தையும், அப்பெயரொச் சம் போழ்து எனனுங் காலபபெயரையுங கொண்டன. வா பகுதி, முதல் குறுகல்விகாரம், ந சந்தி, த் இறந்தகாலஇடைநிலை, உ எச்சவிகுதி. அடைபகுதி, ந சநதி, த் இடைநிலை, உ விகுதி. வெய்துறு பகுதி, உகரக்கேடுசந்தி, உம எதிர்காலததினமேல் நின்ற எச்சவிகுதி. வெய்துறு ஒருசொல் தன்மைத்து. வருநதாக் காலத்தும் எனநிற்றலால் உம்மை இறநததுதழீஇய எச்சப்பொருட்டு. (அ)

9. கற்றார்முன் (பலநூல்களையும்) கற்றவர்முன்பு, கல்வி - (தான் கறற) கல்வியை, உரைத்தல் - (ஏற்க) சொல்லுதல், மிகஇனிது ஏ - மிகவும் இனியதேயாம். மிக்காரை - அறிவிற் பெரியோரை, சேர்தல் - அடைதல், மிகமாண - மிகவுமாட்

சிமைப்பட, முன் இனிது ஏ - முற்பட்ட இனிய செய்கையே யாம். எள் துணை ஆயினும் - எள்ளளவாயினும், தான் இரவாது - தான (ஒருபொருளைப்பிறரிடத்தில) இரக்காமல், ஈதல்- (ஒருவருக்கு) கொடுததல், எதுணை உம - எவவளவும், ஆறற இனிது ஏ - மிகஇனியதேயாம்.

உரைத்தல், சேர்தல், ஈதல் எ, இனிது ப. மாண என்னும் வினையெசசம் இனிதுஎன்னுங்குறிப்பு வினைமுற்றையும், இரவாது என்னும் எதிர்மறை வினையெச்சம் ஈதல் எனனுந தொழிற பெயரையுங் கொண்டன. மாண் பகுதி, அ எசச விகுதி. இர பகுதி, வ் சநதி, ஆ எதிர்மறை விகுதி, அனைத தம ஒரு பகுதி, தகரம் விரித்தல் விகாரம், உ எச்சவிகுதி. ஆயினும் ஆன் இடைக்குறை. உமமை இரண்டனுள் முனனது இழிவுசிறபபு. பின்னது உயர்வுசிறப்பு. ஈதல்தொழிற்பெயா ஈ பகுதி, தல் விகுதி. இதனடியாக ஈநத, ஈந்து, ஈநதான எனவினை விகறபங்களை வருதலகாண்க. (௯)

10. நட்டார் - சிநேகித்தவரை, புறங்கூறுன - புறததிற பழியாமல், வாழ்தல் - உயிர்வாழ்தல், நனி - மிகவும்,இனிது ஏ - இனியதேயாம், பட்டாங்கு - உண்மைநெறியை, பேணி- விரும்பி, பணிந்து - (யாவர்க்கும்) வணக்க முடையவனாகி, ஒழுகல் - நடத்தல், முன இனிது ஏ - முறபட்ட இனியசெய கையேயாம். முட்டு இல்-குறைவில்லாத, பெரும்பொருள்- பெரியபொருளை, ஆக்கியக்கால - தேடில், அது - அப்பொருளை, தக்கஉழி-சறபாததிரத்தில், ஈதல்-செல்லவிடுதல், நன்று ஏ-இனியதேயாம்.

வாழ்தல், ஒழுகல், ஈதல் எ. இனிது - நன்று ப. ஒழுகல் தொழிறபெயர் ஒழுகுபகுதி, உகரக்கேடுசந்தி, அல்தொழிற

பெயர் விகுதி. நட்டார் உயர்திணைப் பலர்பாற்படர்க்கை இறந்தகால வினையாலணையும்பெயர் - நள் பகுதி, த் இடைநிலை, ளகரமும தகரமும டகரமாகத் திரிதல்சந்தி, ஆர் விகுதி. தக்க அகரவீறு தொகுத்தல் - புறங்கூறுன வினைமுற்று எச்சம் ஆகிறது. பேணி என்னும் இறநதகால வினையெச்சம பணிாது என்னும் இறநதகால வினையெச்சத்தையும் அவ்வெச்சம் ஒழுகல் எனனுந தொழிறபெயரையுங் கொண்டன. பேண், பணி, ஒழுகு பகுதிகள. மறறு அசைநிலை. (௧௦)

**11.** சலவரை - வஞ்சகரை, சாராமல - அடையாமல, விடுதல் - ஒழிதல், இனிதுஏ - இனியதேயாம். புலவர்தம்- அறிவுடையோரது, வாயமொழி - வாய்சசொல்லை, போற றல் - கைக்கொளளுதல், இனிது ஏ - இனியதேயாம். மலா- பராத, தலை - இடத்தையுடைய, ஞாலத்து - உலகத்தில், மன் - நிலைபெற்ற, உயிர்க்கு எலலாம் - எல்லாவுயிரிடத்தும், தகுதியால்-பொருநதிய ஒழுககததோடு, வாழ்தல்-நடததல, இனிது ஏ - இனியதேயாம்.

விடுதல, போற்றல், வாழ்தல் எ. இனிது ப. சலவர் புலவர் காரணப்பெயர்கள் - சலம புலம் பகுதிகள், அர் பலர்பால்விகுதி, மகரககேடும், வகரததோறறமும் சந்தி. சாரா ஈறுதொக்க எதிர்மறை வினையெச்சம் - சார பகுதி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, மல் விகுதி தொகுத்தல். கு உருபுமயக்கம். ஆலுருபு உடனிகழ்ச்சிப்பொருட்டு. (௧௧)

**12.** பிறன் - பிறனுடைய, கைபொருள் - கையிலுள்ள பொருளை, வவ்வான் - அபகரியாமல், வாழ்தல் - வாழ்ந்திருத்தல், இனிது ஏ-இனியதேயாம். அறம்-தருமத்தை, புரிநது - செய்து, அல்லவை - பாவங்களை, நீககல் - நீக்குதல்,

இனிது ஏ - இனியதேயாம். மாணாத - மாட்சிமைப்படாத, மயரிகள் - அறிவில்லாதவர்களை, மறந்தேயும் - மறந்தாயினும், சேராத - அடையாத, திறம்தெரிந்து - வகையைத்தெளிந்து, வாழ்தல் - இனிது ஏ - இனியதேயாம்.

வாழுதல், நீக்கல், எ. இனிது ப. மாணா, சேரா ஈறு தொக்க எதிர்மறைப் பெயரெச்சங்கள் - மாண் - சேர் பகுதிகள், ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதிகள். து சாரியையும், அகரவிகுதியும் தொகுத்தல். மயரிகள் ஒருமையிற் பன்மைவந்த வழுவமைதி. மயா பகுதி, இ பெயர்பொருள் விகுதி. கள்விகுதிக்கு முன்சொன்னபடிகொள்க. மயர்மயக்கம். ஏய் என்னும் வினையெச்சவிகுதி வினையெச்சத்தின்மேல் நின்றது. எனின் ஏன எனமுடி ஏய் என விகாரப்பட்டு நின்றது எனினும் அமையும்.மறவாமல என நிறறலால் உம்மை இறந்ததுதழீஇயஎச்சப்பொருட்டு.புரிந்து, மறந்து தெரிந்து, இறந்தகாலவினையெச்சங்கள்-புரி - மற, தெரி இவை வினைப்பகுதிகள். பிறன்கை தறகிழமைப் பொருளில்வந்த ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். கைப்பொருள் உருபும் பயனுந் தொக்க ஏழாம வேற்றுமைத ஏழா நிலைத்தொடர். அறம் புரிந்து ஆக்கப்படு பொருளில்வந்த இரண்டாம் வேற்றுமைத தொகைநிலைத்தொடா. (கஉ)

13. வெல்வது (தான்) வெல்லுதலை, வேண்டி - விரும்பி, வெகுளாதான் (பிறரோடு) கோபியாதவனது, நோன்பு-பொறுமை, இனிது ஏ - இனியதே யாம். ஒலலும் துணைஉம் (தனக்கு) கூடுமளவும், ஒன்று (தான்மேற்கொண்டயாதானும்) ஒருசெயலை, உய்ப்பான் - நடத்துவானது, பொறை - பொறுமை, இனிதுஏ - இனியதேயாம். இல்லது-

(தனக்கு) இல்லாத ஒன்றை; காமுற்று - விரும்பி, இரங்கி-மனமெலிந்து, இடாப்படாா - துன்பப்படாமல், செய்வது-செய்யத்தக்க செயலை, செய்தல் இனிது ஏ - செய்வது இனியதேயாம.

நோன்ப, பொறை, செயதல் எ. இனிது ப. வெல்வது இடைநிலை பெறறுவந்த தொழிற்பெயா - வெல் பகுதி, வ் எதிர்கால இடைநிலை, அ சாரியை, துதொழிறபெயர் விகுதி. நோன்பு, பொறை தொழிற பெயாகள - நோன் பகுதி, பு விகுதி. பொறுபகுதி, உகரக்கேடுசந்தி, ஐவிகுதி. உய்ப்பான உயாதிணை ஆண்பாறபடாக்கை எதிர்கால வினையாலணையும பெயர் - உய் பகுதி, ப சநதி, ப் இடைநிலை, ஆன விகுதி. கா முறறு இறநதகால வினையெச்சம் - காமுறு பகுதி, முதனிலை யெழுதநாயதநோனறி நின்ற றகரம இடைநிலை, உகரக்கேடு சநதி, உ எசசவிகுதி. ஈறுதொகுநின்ற காமம உறு எனனும் இரு சொறகளும ஒரு சொறறனமைப்பட்டு நினறன. (௧௩)

14. தானம் கொடுப்பான - தானஞ்செய்பவனது, தகை ஆண்மை — ஆண்மைத தனமை, முன் இனிது ஏ - முறபட்ட இனியசெய்கையேயாம. மானம்பட - மானம்அழிய, வரின்-வந்தால், வாழாமை-உயிாவிடுதல், முன இனிதுஏ-முறபட்ட இனிய செய்கையே யாம். ஊனம்கொண்டாடாா — குறறத்தைப பாராட்டாமல், உறுதிஉடையவை - குணமிக்கசெயல கலை, கோள்முறையால்-கொள்ளுமுறைமையால், கோடல்-கைக்கொள்ளுதல், இனிது ஏ - இனியதேயாம்.

தகையாண்மை, வாழாமை, கோடல் எ. இனிது ப. கோண்முறையால் எனபபராட்டுங்கொள்க. தானம் கொடை.

நோன்பு நோற்பான் என்பதுபோலத் தானங் கொடுப்பான் என நின்றது. வரின் என்னும் எதிர்கால வினையெச்சத் திறகு மானம் எழுவாயாய நின்றது. உறுதி குணத்தின மேல் நிற்றலால் தொழிலாகுபெயர் - உறு பகுதி, தி விகுதி. நோன் முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (சச)

**15.** கயவரை - கீழ்மக்களை, கையிகந்து - கைவிட்டு, வாழ்தல் இனிது ஏ - வாழுதல் இனியதே யாம். உயர்வு - உயர்ந்த செயல்களை, உள்ளி - நினைந்து, ஊக்கம் பிறத்தல் - செய்யமுயலுதல், இனிது ஏ - இனியதே யாம். இவர் எளியர் என்று - இவர் எளியவரென்று, இகழ்ந்து உரையார் ஆகி (ஒருவரை) இகழ்ந்து பேசாராகி, ஒளிபட - புகழுண்டாக, வாழ்தல் - நல்லொழுக்கினராதல், இனிது ஏ - இனியதே யாம.

வாழ்தல், ஊக்கம்பிறத்தல், எ. இனிது ப. கயவர் சாரி ணைப்பெயர் - கயமை பகுதி, ஈறு கெடுதலும் வகரத்தோற்ற முமம சாதி, ஆ பலர்பால் விகுதி. கையிகந்து இறந்த காலவினையெச்சம் - கையிக பகுதி, ந் சந்தி, த் இடைநிலை, உ விகுதி. கையிக ஒருசொல் தன்மைத்து. உள்ளி இறந்த காலவினையெச்சம் உள் பகுதி, ள் சந்தி, இ எச்சவிகுதி. புகழ் ஒளிபோலப் பரும அறிய நிற்றலால் ஒளி உவமையாகுபெயர். (சரு)

**16.** அடைந்தார் (தம்மையடைக்கலமாக) அடைந்தவர், துயர் கூராமல் - துன்பமடையாமல், ஆற்றல் (ஒன்றை) செய்தல், இனிது ஏ - இனியதேயாம். கடம்கொண்டும் - கடன் வாங்கியாயினும், செய்வன - செய்யுங்காரியங்களை, செய்தல் இனிது ஏ - செய்தல் இனியதேயாம். சிறந்து அமைந்த-

சிறப்புற்று நிறைந்த, கேள்வியர் ஆயின்உம் - நூற்கேள்விகளையுடையாரானாலும், ஆராயந்து அறிந்து - ஆலோசித்துத் தெரிந்து, உரைத்தல் (ஒன்றை) சொல்லுதல், ஆற்ற-மிகவும், இனிது ஏ-இனியதே யாம்.

ஆற்றல், செய்தல், உரைத்தல் எ. இனிது ப. ஆற்றல் தொழிற்பெயர்-ஆற்று பகுதி, உகரக்கேடுசந்தி, அல் தொழிற்பெயர்விகுதி. செய்வன அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை எதிர்காலவினையாலணையும் பெயர் செய்பகுதி, வ் இடைநிலை, அன் சாரியை, அ பலவின்பால்விகுதி. சிறந்து என்னும் இறந்த காலவினையெச்சம் அமைந்த என்னும் இறந்தகாலப் பெயரெச்சத்தையும் அவ்வெச்சம் கேள்வியர் என்னும் தொழிற்பெயரின் பகுதியையும், ஆராய்ந்து என்னும் இறந்தகால வினையெச்சம் அறிந்து என்னும் இறந்தகால வினையெச்சத்தையும் அவ்வெச்சம் உரைத்தல் என்னும் தொழிற்பெயரையுங் கொண்டன. அவற்றின் பகுதிகள் சிற, அமை, கேள்வி, ஆராய, அறி. உரை. (கசு)

17. கற்று அறிந்தார் (நூல்களை) கற்றுணர்ந்தவர், கூறும்-சொல்லுகின்ற, கருமப் பொருள் - உறுதிப் பொருள், இனிது ஏ (உயிர்க்கு உறுதி தருதலால்) இனியதேயாம். பற்று-பற்றுக்கோடாக, அமையாத - ஆதரியாத, வேந்தன்கீழ்-அரசன் கோற்கீழ் (இருந்து) வாழாமை (குடிகள்) வாழாதிருத்தல், முன் இனிது ஏ-முற்பட்ட இனியசெய்கையேயாம். தெற்றெனல் இன்றி-தெளிதலில்லாமல் (வறுமையால் தளர்ந்து என்றபடி) தெளிந்தாரை (தம்மை) தெளிந்தடைந்தவரை, தீங்கு ஊக்காத - தீங்கிற்செலுத்த நினையாத, பத்திமை இல்-

அன்புடைமையைப் பார்க்கிலும், பாங்குஇனியது - மிகவும் இனியசெயல், இல் (வேறொன்று) இல்லை.

கருமப்பொருள், வாழாமை,இனியது எ. இனிது, இல் ப. அமையா, ஊக்கா ஈறுதொக்க எதிர்மறைப் பெயரெச்சங் கள். இனியது ஒன்றன்பாற்படர்க்கைக்குறிப்புவினையாலணை யும் பெயா. இல்லுருபு உயர்வு குறித்தலில்வந்த எல்லைப பொருட்டு. (கஎ)

18. எல்லியம்போது - இராக்காலத்தில், வழங்காமை- வழி செல்லாதிருத்தல், முன இனிது ஏ - முற்பட்ட இனிய செய்கையே யாம. சொலலும் கால் (ஒனறை) சொல்லு மிடத்து, சோாவு இனறி - மறப்பிலலாமல், சொல்லுதல (பொருநத) சொல்லல, மாணபு இனிது ஏ - மிக இனியதே யாம. புல்லிகொளினு உம - (தம்ம வலியவாது) தழுவிக் கொண்டாலும, பொருளல்லா தம் - ஒருபொருளாசாசவ ரது, கேண்மை-சிநேகததை, கொளளாமல் விடுதல - நீககி விடுதல், இனிது ஏ - இனியதே யாம்.

வழங்காமை, சொல்லுதல், கொள்ளா விடுதல் எ. இனிது ப. சொல்லும் எதிாகாலப் பெயரெச்சம் சொல பகுதி, ல் சநதி, உம எச்சவிகுதி. சொல்லின் எனபபொருள கொள்ளில் சொல்லுஙகால் எனபதனை ஒரு சொல்லாகக் கொண்டு கால் வினையெச்ச விகுதியாகவும், உம் விரித்தல விகாரம ஆகவுங்கொள்க. புல்லி இறநதகால வினையெச்சம புல் பகுதி, ல் சநதி, இ எச்சவிகுதி. உமமை இழிவுசிறப்புப பொருட்டு.

19. சிற்றாள் உடையான் - ஏவலாளனை யுடையவனது, படைக்கலம் - ஆயுதம், மாண்பு இனிது ஏ - மிக வினியதே

யாம். நட்டார் உடையான் - நட்பினரை யுடையவனது, பகைஆண்மை(பகைவரோடு)பகைக்கும் ஆண்தன்மை, முன் இனிது ஏ - முறபட்ட இனியசெய்கையேயாம். பால்படும்-பால்சுரக்கும், கன்று ஆ-கறவைப்பசுவை, உடையான்-உடையவனது, விருந்து - விருநதானது, எ துணைஉம் - எவ்வள வாலும், ஆறற இனிது ஏ - மிகவும் இனியதேயாம்.

படைக்கலம், ஆண்மை, விருந்து எ. இனிது ப. என்ப அசைநிலை. விருந்து புதுமை - அது இனியபொருள்மேல் நிற்றலால் பண்பாகுபெயா. சிற்றுளுடையான், நட்டாருடையான் உடைமைப்பொருளில்வநத இரண்டாம் வேறறுமைத் தொகை நிலைத்தொடர்கள். உடையான ஆண்மை பண்புத் தறகிழமைப் பொருளிலவநத ஆறும் வேறறுமைத தொகை நிலைததொடா. கறறுவேற்றுமைத தொடராதல் மெனறொடா வனறொடர் ஆயிறறு. (கக)

20. பிச்சைபுக்கு - பிச்சை யெடுத்து, உண்பான - உண்பவன், பிளிறுமை(கொடுப்பவரை) கோபியாதிருத்தல், முன் இனிது ஏ - முற்பட்ட இனிய செய்கையேயாம. துச்சில் இருந்து - ஒதுக்கிடததிற் குடியிருநது, துயா கூராத - துன் பமடையாத, மாண்பு - மாட்சிமை, இனிது ஏ - இனியதேயாம். உறற - மிகுந்த, பேர்ஆசை - பேராசையால், கருதி (கிடைததறகரியஒருபொருளை) நினைத்து, அறன்-தருமத்தை, ஒருவும் - கைவிடும், ஒறசம் இலாமை - மனத்தளர்ச்சி யில் லாமை, இனிது ஏ - இனியதேயாம்.

பிளிறுமை, மாண்பு, ஒற்கமிலாமை எ. இனிது ப. ஒதுக் கிடம அயல்வீடு. புக்கு இறந்தகாலவினையெச்சம புகுபகுதி, முதனிலையெழுத்தாய்த் தோன்றியககரம் இடைநிலை, உகரக்

கேடு சந்தி, உளச்சவிகுதி. பிளிருமை எதிர்மறைத்தொழிற பெயர்பிளிறு பகுதி, உகரக்கேடுசந்தி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒருபகுதி, மை தொழிற்பெயர் விகுதி. ஒருவும் என்னும் எதிர்காலப்பெயரொச்சம் ஒற்கம் என்னுந தொழிற பெயர்கொண்டது. ஒல்குபகுதி, லகரம் றகரமாகத திரிதலும் உகரக்கேடும் சந்தி, அம்தொழிற்பெயர் விகுதி. ஒருஉம் இவ்வுயிரளபெடை இன்னிசை நிறைத்தலில்வந்தது. (௨0)

---

கபிலதேவர்

இயற்றிய

இன்னாநாற்பது.

21. மறம் - கொலைத்தொழிலையுடைய, மனனர் - அரசாகளது, கொடுங்கோல்கீழ் - கொடுங்கோலின்கீழ், வாழுதல் - வாழுதல், இன்னா - துன்பமாம். நெடுநீர் - பெரிய வெள்ளத்தில், புணைஇன்றி - தெப்பமில்லாமல், நீநதுதல- நீநதிச்செல்லுதல், இனனா - துன்பமாம். கடுமொழியாளா- கடுஞ்சொல்லையுடையாரோடு, தொடாபு - செய்யும்நட்பு, இன்னா - துன்பமாம். தடுமாறி (தத்தமக்குரியநிலையினின்று) தப்பி, வாழ்தல் - வாழுதல், உயிர்க்கு இன்னா - உயிர்களுக்குத்துன்பமாம்.

நீந்துதல், தொடர்பு, வாழ்தல் எ. இன்னா ப. கடுமொழியாளர் கடு என்னும் பண்படுத்து ஒருசொற்றன்மைத்தாய நின்ற கடுமொழி பகுதி, யகரமெய் சநதி, ஆளர் பலாபால விகுதி. இன்றி எதிர்மறைப் பண்படியாகப் பிறந்த குறிப்பு

வினை வினையெச்சம்-இன்மைபகுதி, ஈறுகெடுதலும், லகரம் னகரமாகத் திரிதலும் சந்தி, றி குறிப்பு வினையெச்ச விகுதி, இவ்வெச்சம் நீந்துதல் என்னும் தொழிற்பெயரோடு முடிந்தது. கடுமொழியாளர் தொடர்பு உடனிகழ்ச்சிப்பொருளில் வந்த மூன்றும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். (உக)

22. எருதுஇல் - எருதில்லாத, உழவர்க்கு - உழுதொழிலோர்க்கு, போகுஈரம - பருவங்கழிந்தஈரம் (ஈரங்கழிதல் என்றபடி) இன்னா - துன்பமாம். கருவிகள் - (பிடித்த) ஆயுதங்களால (உள்ளசெய்கைகள்) மாறி - தடுமாறி, புறங்கொடுத்தல் (பகைவர்க்கு) புறங்கொடுத்தல், இன்னா-துன்பமாம. திருஉடையாரை - செல்வமுடையவரை, செறல - கோபித்தல, இன்னா - துன்பமாம். பெருவலியார்க்கு(தம்மினும்)மிக்கவலிமையுடையவர்க்கு, இன்னாசெயல் - துன்பஞ்செய்தல், இன்னா(தமக்கு)பெருந்துன்பமாம.

செல்வமுடையவரையும் தம்மினும்மிக்க பெரிய வலிமையுடையவரையும கோபித்தால் அவர்களால் கோபிக்கப் பட்டுப் பெருந்துன்பம் அடைவராதலால் இவ்வாறு கூறினா. போகீரம, புறங்கொடுத்தல், செறல், செயல் எ. இன்னா ப. போகு வினைப்பகுதி ஆதலால் போகீரம் வினைத்தொகைநிலைத்தொடர். செறல் தொழிற்பெயர்-செறு பகுதி, உகரக்கேடு சந்தி, அல் தொழிற்பெயர்விகுதி. (உஉ)

23. ஆற்றல் இலாதான் - வீரமில்லாதவன், விடுத்த- எறிந்த, படை - ஆயுதம், இன்னா (பின்னிடச்செய்தலால்) துன்பமாம். நாற்றமஇலாத - வாசனையில்லாத, மலரின் வனப்பு-பூவின்பொலிவு, இன்னா-துன்பமாம். தேற்றம்இலாதான் - (ஒருபொருளை) தெளிந்து துணியாதவன், துணிவு-

(இதுவேயென்ன) தணிந்துகூறல், இன்னா (கொள்வோர்க்கு) துன்பமாம். ஆங்கு - (அது) போல, மாற்றம் அறியான (தனக்குஎதிரேபேசுவோன) வார்த்தை (இன்னதென்று) அறிந்துபேசாதவனது, உரை-சொல், இன்னா-துன்பமாம்.

மாற்றம் அறியான் என்பதற்குச் சொல்லின் றன்மையறியாதவன்எனப்பொருள் கொள்ளினும் அமையும். பிடித்தபடைஎனப் பாடம் உண்டு. படை, வனப்பு, துணிவு, உரை எ. இன்னா ப. விடுத்த இறந்தகாலப பெயரெச்சம் - விடு பகுதி.இதுபடைஎன்னுஞ்செயப்படுபொருளோடுமுடிந்தது. படை கருவிபபொருளில்வாத தொழிற்பெயர் படு பகுதி, உகரக்கேடு சந்தி,ஐ தொழிறபெயர்விகுதி. மலா வினைமுதற பொருளில்வந்த இகர விகுதியோடு புணர்ந்து குன்றிய தொழிறபெயர். (உ௩)

24. பொருள (உள்ளிட்ட) பொருளின் (நயத்தை) உணரவார - அறிந்துமகிழ்வார், இல்வழி-இல்லாதவிடத்து, பாட்டு உரைத்தல் (தானபாடிய) செய்யுளை (ஒருவன்) சொலலுதல், இன்னா - துன்பமாம். இருள்கூர - இருளமிகுந்த, சிறுநெறி - சிறு வழியில், தாம் - ஒருவர், தனி - துணை யில்லாமல் போக்கு - போகுதல், இன்னா - துனபமாம். அருள் இலார சமகண - கிருபையில்லாதவரிடத்து, செலவு (ஒருபொருளை விரும்பி ஒருவன்) செல்லுதல், இன்னா-துன்பமாம். பொருள இலார - திரவியமில்லாதவர், வண்மை புரிவு - கொடுத்தலை மேறகொள்ளுதல், இன்னா - துன்பமாம்.

உரைத்தல், போக்கு, செலவு, புரிவு எ. இன்னா ப. பாடு, போக்கு இடையில் ஒற்றுத்தோன்றிய தொழிற பெயாகள. பாடு, போகு பகுதிகள், செலவு, புரிவு விகுதி

பெற்றுவந்த தொழிற்பெயர்கள் - செல் பகுதி, அ சாரியை, வ் சந்தி, உ விகுதி. புரி பகுதி, வ்சந்தி, உ விகுதி பகுதி ஒழிந்தது இடைச்சொல்ஆதலால்வகரமெய்தோன்றியது. ()

25. உடன்பாடுஇலாத - (தன்னோடு) பொருத்தம் இல்லாத, மனைவிதொழில் - மனையாள் (செய்யும்) கருமம், இன்னு - துன்பமாம். இடன்இல் - ஒப்புரவில்லாத, சிறியர்ஓடு- அறிவிற் சிறியவரோடு, யாத்த - கட்டுண்ட, நட்பு-சிநேகம், இன்னு - துன்பமாம். இடங்கழியாளர் - நல்லொழுக்கமில்லாரோடு, தொடர்பு - (கொண்ட) உறவு, இன்னு - துன்பமாம். கடம் உடையார - கடன்பட்டவர், காண - (கொடுத்தோர்) காண, புகல் - சஞ்சரித்தல், இன்னு - துன்பமாம்.

கடமுடையார் எனப்பாடங்கொள்க. தொழில், நட்பு, தொடர்பு, புகல் எ. இன்னு ப. இடம்இடன் இறுதிநிலைப் போலி. உடனபாடுமுதனிலைதிரிந்ததொழிற்பெயா-உடன்படு பகுதி. உடம்பாடு எனவழங்குதலும் உண்டு. யாத்தஇறந்த காலப்பெயரெச்சம் யா பகுதி,த்சந்தித்இடைநிலை, அ விகுதி இவ்வெச்சம் நட்பு என்னுஞ் செயப்படுபொருளோடு முடிந்தது - நள் பகுதி. (உரு)

26. உண்ணது-(தான்)அநுபவியாது,வைக்கும் - (தேடி) புதைத்துவைக்கும், பெரும்பொருள்வைப்பு - பெரும்பொருளாகிய வைப்பு, இன்னு - துன்பமாம். நண்ணுத - (மனம்) பொருந்தாத, பகைவர் - பகைவரோடு, புணர்ச்சி - மனங்கலந்துநடத்தல், நனிஇன்னு - மிகவும்துன்பமாம். கண்இல்- தாட்சிணியமில்லாத, ஒருவன் வனப்பு - ஒருவனது அழகு, இன்னு - துன்பமாம். ஆங்கு - (அது) போல, எண் கணித

நூலை, இலான் (ஆராய்ந்தறிதல்) இல்லாதவன், செய்யும்-செய்கின்ற, கணக்கு-கணிதம், இன்னா - துன்பமாம்.

கண்ணிலான் அந்தகன் எனப்பொருள் கொள்வாரும் உளர், பெரும்பொருள்வைப்பு, புணர்ச்சி, வனப்பு, கணக்கு எ. இன்னா ப. வைப்பு தொழிலாகு பெயராயப் பொருள் மேல்நிற்றலால் பெரும்பொருள்வைப்பு இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வை பகுதி, ப்சநதி, பு தொழிற்பெயர்விகுதி. ாண்ணா ஈறுதொக்க எதிர்மறைபபெயரெச்சம். எண் தன்னை யுணாத்துங் கருவியாகிய நூல்மேல் நிற்றலால் காரியவாகு பெயா. (உசு)

27. குலத்தில் பிறந்தவன் - நல்ல குடிப்பிறப்பிற் பிறந்தவன், கல்லாமை - (நூல்களை) சற்கா திருத்தல், இன்னா-துன்பமாம். நிலத்துஇட்ட - விளைநிலத்தில்விதைத்த, நல்வித்து-நல்லவித்து, நாறாமை - முளையாமை, இன்னா - துன்பமாம். சுவைத்தகையாா - நல்ல வடிவினையுடைய பெண்கள், நாண் இன்மை - நாணமில்லா தொழுகுதல், இன்னா - துனபமாம். ஆங்கு - (அது) போல, குலம்இல்வழி - (தமது) குடிப்பிறப புஇல்லாத விடத்து, கலத்தல் - கலநது வாழ்தல், இன்னா-துன்பமாம்.

கல்லாமை, நாறாமை, நாணின்மை, கலத்தல் எ. இன்னா ப. கல்லாமை, நாறாமை எதிர்மறைத் தொழிற் பெயர்கள்-கல், நாறு பகுதிகள். உடனபாட்டில்வரில் இறநதகால நிகழ கால இடை நிலைகள் பெற்று, கற்றமை, கற்கின்றமை என வரும். (உள)

28. மாரிநாள் - கார்காலத்தில், கூவும் - கூவுகின்ற, குயிலின்குரல் - குயிலினதுகுரல், இன்னா - (பிரிந்தவர்க்கு) துன

டமாம். ஈரம்இலாளர் - அன்பில்லார் (கூறும்) கடுமொழி கூறறு - கடுஞ்சொல்லின்திறம், இன்னு - துன்பமாம். மாரி வளம - மழைவளம், பொய்பபின் - குறைந்தால், (அககு றைவு) ஊர்க்குஇன்னு - ஊர்க்குத் துன்பமாம். ஆங்கு (அது) போல, ஏரிஎருத்துஇன் - முதியஎருதால், உழவு இன்னு- உழுதல் துன்பமாம்.

மாரிவளம் பொய்ப்பின் எனப்பாடங்கொள்க. குரல், கடுமொழிக்கூற்று, பொய்ப்பின் என்னும் வினையெச்சத்தி னின்று பிரிநத தொழிற்பெயராகிய பொய்த்தல், உழவு எ. இன்னு ப. பொய்பபின் எதிர்கால வினையெச்சம் பொய் பகுதி, ப சந்தி, ப் விரித்தல் விகாரம், இன் எச்சவிகுதி. இத னடியாகப் பொய்ததல், பொய்தத, பொய்த்து, பொய்த் தான் என வினை விகற்பங்கள்வரும். இன உருபு ஏதுப்பொ ருட்டு. உருபு ஏற்றுநின்றதால் எருது எருத்துஎனத தகரஒற் றுஇரட்டித்து நின்றது. (உஅ)

29. ஈநதவகைஆல் - கொடுத்தஅளவில், உவவாதாக்கு- இன்பமடையாதவர்க்கு, ஈப்பு - (மீட்டும்) கொடுத்தல், இன் னு - துன்பமாம். பாத்து - (வநதவிருந்தினர்க்கு) பகுத்து, உணவுஇல்லார்உழை-உண்ணுத லில்லாதவரிடத்து, சென்று- போய், உணல் - உண்ணுதல், இன்னு - துன்பமாம். மூத்த இடத்து - மூப்புவந்த விடத்து, பிணி - நோய் (வருதல்) இன்னு-துன்பமாம். ஆங்கு - (அது) போல, ஓத்துஇல்லாத (வேதம்) ஓதுதலில்லாத, பார்ப்பான்உரை - அநதணனுடைய சொல், இன்னு - (கேட்போர்க்கு) துன்பமாம்.

ஈப்பு, உணல், பிணி, உரை எ. இன்னு ப. ஈந்த ஈத்த மெல்லெழுத்து வல்லெழுத்தாதல் வலித்தல்விகாரம். ஈ பகு

தி, ந் சந்தி, த் இடைநிலை, அ விகுதி. ஈட்பு தொழிற்பெயர் ஈ பகுதி. பாத்து இறந்தகால வினையெச்சம் பா பகுதி, த் சந்தி, த் இடைநிலை, உ எச்சவிகுதி. பகுஎன்னும் பகுதி ஈறு தொக்கு முதனீண்டு பா எனநின்றது. இவ்வெச்சம் உணல் என்னுந் தொழிற்பெயரோடுமுடிந்தது. மூத்த இறந்தகாலப் பெயரொச்சம் - மூ பகுதி. ஒத்து இடையில் ஒற்றுத்தோன்றிய தொழிற்பெயர் - ஓது பகுதி. (உகூ)

30. பெரியார்ஓடு - அறிவிற் பெரியவரோடு, யாத்த - கட்டுண்ட, தொடர் - தொடர்ச்சியை, விடுதல் - கைவிடுதல், இன்னா - துன்பமாம். அரியவை - செய்தற்கரிய காரியங்களை, செய்தும்என (நாம்) செய்து முடிப்போமென்று, உரைத்தல் - (பிறாக்குதகுணிவு) சொல்லுதல், இன்னா-துன்பமாம். பரியார்க்கு. (தம்மிடத்து) இரக்க மில்லாதவர்க்கு, தாம்உற்ற - தாம் அடைந்த வறுமையை, கூற்று - சொல்லுதல், இன்னா - துன்பமாம். பெரியார்க்கு - (தம்மில்) பெரியவர்க்கு, தீய - கெடுதிகளை, செயல்இன்னா - செய்தல் துன்பமாம்.

தொடர், உரைத்தல், கூற்று, செயல் எ. இன்னா ப. தொடர் முதனிலைத் தொழிற்பெயர். செய்தும் தன்மைப பன்மை எதிர்காலவினைமுற்று - செய் பகுதி, தும் தன்மைப் பன்மை விகுதி. இவ்விகுதி எதிர்காலத்தின்மேல் நின்றது. கூற்று இடையில் ஒற்றுத் தோன்றிய தொழிற்பெயர். கூறு பகுதி. (௩0)

31. கல்லாதான் - (நடத்துதலை) கற்காதவன், ஊரும்-நடத்தும், கலி (மணம்) மிகுந்த, மாபரிப்பு - குதிரையின்செ

லவு, இன்னு - துன்பமாம். அல்லாதான் (தொடுத்துச்சொல்லும் சொல்லின்) வலிமை யில்லாதவன், சொல்லும்உரையின்பயன் - சொல்லுஞ் சொல்லின்பொருள், இன்னு - துன்பமாம். இல்லார் - கறறறிவில்லாரது ; வாய்ச் சொல்லின், வாய்ச் சொல்லினது, நயம் - இன்பம், இன்னு - (பயன்படாமையால்) துன்பமாம ஆங்கு - (அது) போல, கல்லாதான் - (நூல்களை) கற்காதவன், கோட்டி - சபையில், கொளல் - (ஒன்றைச்சொல்ல) மேறகொளளுதல், இன்னு-துனபமாம்.

வல்லாதான் சொல்லும் எனப்பாடம் உண்டு, பரிப்பு. பயன், நயம், கொளல் எ. இன்னு ப. கல்லாதான் எதிர்மறைத் தெரிநிலை,வினையாலணையும்பெயா. இல்லார் எதிர்மறை பபண்படியாகப் பிறநத குறிப்பு வினையாலணையும் பெயர். கல் பகுதி, ல் சநதி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒரு பகுதி, து சாரியை, உகரக்கேடு சநதி, ஆன் விகுதி. இன்மை பகுதி, ஈறுகெடுதலும் லகரத்தோற்றமும் சநதி, ஆர்விகுதி. பகுதியே எதிாமறைமேல் நின்றது. (௩க)

32. பண் - நரம்பின் வீக்குதல், அமையாத - நிரம்பாத, யாழ் இன் கீழ் - வீணையினிடத்து (இருநத) பாடல் - பாடுதல், பெரிது இன்னு - மிகவுந் துன்பமாம். எண் அறியா - கணிதநூலை யறியாத, மாந்தர் - மனிதர், ஒழுக்கும் - நடத்தும், நாள் கூற்று - நாளினது வகை, இன்னு - துன்பமாம். மண் இல் - மாற்சனையில்லாத, முழவு இன் ஒலி - மத்தளத்தினொலி, இன்னு - துன்பமாம், ஆங்கு (அது) போல, தண்

மையிலாளர் - பொறுமைக்குணமில்லாதோரது, பகை - பகை கொள்ளுதல், இன்னா - துன்பமாம்.

தன்மையிலாளர் எனப்பாடம் உண்டு. பாடல், நாட் கூற்று, ஒலி, பகை எ. இன்னா ப. ஒழுக்கும் பிறவினைபெய ரெச்சம் ஒழுக்கு பிறவினைப்பகுதி, உகரக்கேடு சந்தி, உம் எச்ச விகுதி. ஒழுகு என்னுந் தன்வினைப்பகுதி விகாரப் பட்டு ஒழுக்கு என நின்றது. பகை தொழிற்பெயர் - பகு பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ தொழிற்பெயர்விகுதி. (௩௨)

33. பொருள் இலான்-பொருளில்லாதவனது, வேளாண் மை - உபகாரத்தை, காமுறுதல் - விரும்புதல், இன்னா-துன பமாம். நெடுமாடம் - நெடிய மாடங்களை யுடைய, நீள நகர் - பெரியநகரத்தில், கைத்து இன்மை - பொருளில்லா திருத்தல், இன்னா - துன்பமாம். அடும - சமைக்கும், மனை பார்த்து இருந்து - (பிறர்) மனையைப் பார்த்திருநது, ஊண் - (உண்ணும்) உணவு, இன்னா-துன்பமாம். கெடும் இடத்து-வறு மைவந்தவிடத்து, கைவிடுவார் - கைவிட்டு நீங்குவோரது, நட்பு - சிநேகம். இன்னா - துன்பமாம்.

காமுறுதல், கைத்தின்மை, ஊண், நட்பு எ. இன்னா ப. அடும் பெயரெச்சம்-அடுபகுதி, உகரக்கேடு சந்தி, உம் எசச விகுதி இவ்விகுதி நிகழ்காலத்தின்மேல் நின்றது. கெடும் என்னும் பெயரெச்சத்தின் விகுதி இறந்தகாலத்தின்மேல் நின்றது. கெடு பகுதி. ஊண் முதனிலைதிரிந்த தொழிலாகு பெயர்-உண்பகுதி. (௩௩)

துறைமங்கலம்
சிவப்பிரகாசசுவாமிகள்
இயற்றிய
நன்னெறி.

34. பூ இன - பூவினல், பொலி - விளங்குகின்ற, குழலாய் - கூந்தலையுடையவளே, தீது அறறோர் - குற்றமில்லாதவராகிய பெரியோர், என்று உம் - எப்பொழுதும், முகமன் உபசார வார்த்தைகளை, இயம்பாதவர்கண் உம் - சொல்லாதவரிடத்தும், சென்று (தாமே) போய், பொருள் (தமக்குக் கிடைத்த) பொருளை, கொடுப்பர் - கொடுப்பார், பூகை - அழகிய கையானது, புகழ ஓ - (தன்னை) புகழுதற்கா (அல்லஎன்றபடி) துன்று - கிடைத்த; சுவை - மதுரமாகிய வுணவை, நா இன்கு - நாக்கினுக்கு, நயந்து-விரும்பி, உதவும்-கொடுக்காநிறகும்.

பெரியவாசள் தம்மை யுபசரியாதவரிடத்தும் தாமே போய்க கொடுப்பர் என்பதுகருத்து. தீதற்றோர் எ. கொடுப பா ப. பொருள் செயபபடுபொருள். குழலாள் குழலாய் விளியுருபு. சென்று, நயந்து என்னும் இறநதகாலவினையெச்சங்கள் கொடுப்பர், உதவும் என்னும் வினை முற்றுகளை முறையாகக்கொண்டன. செல், நய பகுதிசள். சுவை உணவின்மேல் நிற்றலால் பண்பாகு பெயர். ஓ எதிர்மறைப் பொருட்டு. உம்மை இரண்டனுள் முன்னது முற்று. பின்னது இறந்தது தழுவிய எச்சப்பொருள். (௩௪).

35. பிறர்க்கு - பிறருக்கு, உதவிசெய்யார் - உபகாரஞ் செய்யாதவருடைய, பெருஞ்செல்வம் - பெரியசெல்வம்,

வேறு - வேறாயிருப்பினும், பிறர்க்கு - பிறருக்கு, உதவிஆக்கு பவர் - உபகாரமாகச் செய்வோருடைய, பேறுஆம்-செல்வ மாகும், பிறர்க்கு உதவிசெய்யாத-பிறருக்கு உபகாரஞ்செய் யாத, சருங்கடல்நீர் - பெரியகடலி லுள்ளநீரை, புயல்-மேகமானது, சென்று-போய், முகந்து-மொண்டு, பெய்யா-பெய்து, பிறர்க்குகொடுக்கும் - பிறர்க்குக்கொடுக்காநிற்கும்.

ஒருவர் உபகரிக்கும்பொருள் பிறர்பொருளே யாயினும் அப்பொருள் உபகரிப்போர் பொருளாகவேமுடியும் என்பது கருத்து. பெருஞ்செல்வம் எ. பேறும் ப. பேறு முதனிலை திரிந்த தொழிலாகுபெயர் பெறுபகுதி. ஆக்குபவர் பிறவினை எதிர்கால வினையாலணையும்பெயர் - ஆக்கு பிறவினைப்பகுதி, ப் எதிர்கால விடைநிலை, அ சாரியை, அர் பலர்பால்விகுதி. செய்யா ஈறுதொக்க எதிர்மறைப் பெயரெச்சம். முகந்து இறந்தகால வினையெச்சம் முகபகுதி, பெய்யா இறந்தகால வினையெச்சம் பெய்பகுதி, ய சந்தி, ஆ எச்சவிகுதி, இவ் விகுதி, இறந்தகாலத்தின்மேல் நின்றது. (௩௫)

36. பூக்குழலாய் - பூவையணிந்த கூந்தலையுடையவளே, நீக்கம் அறும் இருவா-நீங்குதலில்லாத இருவர், நீங்கி (பகைத்து) நீங்கி, புணர்ந்தால்உம் - (பின்பு) கூடினாலும், அவர் பெருமை-அவரது (நட்பின்) பெருமையை, நோக்கின்-ஆராயின், நொய்துஆகும் - அற்பமாகமுடியும். நெல்இன்-நெல்லி னின்றும், உமிசிறிதுநீங்கி - உமியானதுசற்றுநீங்கி, பழமை போல்-முன்போல, புல்லின்உம் - கூடினாலும், திண்மைநிலை (முன்புமுளைத்தற்குக்காரணமாகஇருந்த)வலிமையினிலைமை, போம்-கெட்டுப்போம்.

பிரிந்துகூடினவருடைய நட்புநில்லாது என்பதுகருத்து
பெருமை எ. நொய்தாகும் ப. நீக்கம் தொழிற்பெயர்-நீங்கு பகுதி, இடையில் மெல்லெழுத்து வல்லெழுத்தாதல வலித்தல்விகாரம், உகரக்கேடுசந்தி, அம் தொழிற்பெயர் விகுதி. நோககின என்னும் எதிர்கால வினையெச்சம் நொய்து என்னும குறிப்பு வினைமுறறையும், புல்லின் எனனும் எதிர்கால வினையெச்சம்போம் எனனும் வினைமுற்றையுங் கொண்டன. நோக்கு, புல் பகுதிகள். நொய்மை பகுதி, ஈறு கெடுதல் சந்தி, து ஒனறன்பால்விகுதி இது எச்சமாயநின்றது. நொய தாகும் ஒருசொல்தன்மைத்தாகக் கொண்டால் ஆறபமாகும் எனபபொருள்கொள்க. நொய்மை எனனும் பண்புப்பகுதி ஈறுகெட்டுப்பகுதிபொருள்விகுதியாகிய துவ்விகுதியையே ற்றுஒருபகுதியாய் ஆகுஎனனும்வினைப்பகுதியோடுகூடி நினற நொயதாகு வினைப்பகுதி, உகரக்கேடுசந்தி, உம் பொதுவினை விகுதி. உம்மை இரண்டும இழிவு சிறடபுபபொருளன. இன் உருபு நீக்கப்பொருட்டு. (௩௬)

37. யாம்-நாம், கல்வி ஆல் - கல்விப்பெருக்கால், கடல அனையம்-சமுத்திரத்தையொபபோம, எனனும்-என்று கருது கினற, அடல் - வலிமையையுடைய, ஏறு - ஆண்சிங்கத்தின து, அனைய - (அகங்காரத்தை) யொதத, செருக்கு - அகங் காரததில், ஆழ்த்திவிடல் - (தம்மை) அழுத்திவிடா தொழி யக்கடவர். முழங்கும் - ஒலிக்கும், பனி - குளிர்ந்த, கடல் உம்(பெரிய)சமுத்திரமும், முனிக்கு அரசு - முனிவர்களுக்கு அரசனுகிய (சிறியவடிவையடைய) அகத்தியன், கை ஆல் (தனது) கையினுல், முகநது - மொண்டு, உண்ணப்படும்- பருகப்படும்,

மிகவுங் கற்றவராயிருப்பினும் அகங்கரிப்பராயிற் கல்வியறிவிற் சிறியவரால் வெல்லப்படுவர் என்பது கருத்து. கற்றோர்தோன்று எ. ஆழ்த்திவிடல் ப. அனையம் உவம வுருபினைச்சொல்லடியாகப்பிறந்த தன்மைப் பன்மைக் குறிப்பு வினைமுற்று-அன் இடைச்சொற்பகுதி, ஐ சாரியை, ய சந்தி அம் தன்மைப்பன்மைவிகுதி. ஆழ்த்தி இறந்தகாலப் பிறவினை வினையெச்சம் ஆழ்ந்து வினைப்பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி. விடல் எதிர்மறை வியங்கோள்வினைமுற்று-விடு பகுதி, உகரக்கேடு சந்தி அல்வியங்கோள்விகுதி. இவ்விகுதியை எதிர்மறை பொருமையேவல் விகுதியெனினும் அமையும். இவ்விகுதி உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வரும் "மகனெனல்மக்கட்பதடியெனல்" என்பவற்றாலும் அறிக. ஏ இரண்டும் அசைநிலைகள். (௩௭)

38. உள்ளம்-மனத்தை, கவர்ந்து எழுந்து - கொள்ளை கொண்டெழுந்து, ஓங்கு - வளருகின்ற, சினம் காத்துக் கொள்ளும் - கோபத்தை யடக்குகின்ற, குணம் ஏ - குணமே என்க - நற்குண மென்றறிக. வெள்ளம் - வெள்ளத்தை, தடுத்தல் (அணைகோலி) தடுக்குதல், அரிது ஓ - (செய்தற்கு) அரியசெயலா, தடம் கரை, பெரியகரையை, போத்து-உடைத்து, விடுத்தல்(அவ்வெள்ளம்புறஞ்செல்ல) விடுக்குதல், அரிது ஓ(செய்தற்கு)அரியசெயலா, விளம்பு(நீ)சொல்லு.

கோபத்தை வெளிவிடாமல் அடக்குதல் அரிய செயல் என்பது கருத்து. நீ - தோ எ. என்க* ப. உள்ளம் வினைமுதற்பொருளில்வந்த தொழிற்பெயர் - உள் பகுதி, ள் சந்தி, அம் தொழிற்பெயர் விகுதி. கவர்ந்து இறந்தகால வினையெச்சம் - கவர் பகுதி. காத்துக் கொள்ளும் பெயரெச்

சம கா பகுதி, ஆசாரியை, தகரமும் ககரமும் தோன்றல் சந்தி, கொள் தற்செயற பொருளில்வந்த விகுதி, அனைத்தும் ஒருபகுதி, ள் சந்தி உம் எச்சவிகுதி. சான் அசைநிலை. ஒ இரண்டும் வினைப்பொருளன. ஏ பிரிநிலை. (௩அ)

39. விழுமியோர் - மேலோர், தம் குறை - தமதுகுறைகள், தீர்வு - தீர்தலை, உள்ளார்-நினையாராகி, பிறர்க்குஉறும் - பிறருக்குவந்த, வெம்குறை - வெய்ய குறைகளை, தளாந்து (மனம்) மெலிந்து, தீர்க்கிற்பார் - நீங்குவார், திங்கள் - சந்திரன, கறை இருளை (தனது உடம்பிலுள்ள) களங்கமாகிய இருளை, நீக்க கருதாது - நீக்க நினையாமல, உலகு இல் நிறை இருளை-உலகத்தில் நிறைந்த இருளை, மேல நின்று - ஆகாயத்தல் நின்று, நீக்கும் - நீக்காநிறபன.

மேலோர் தமது குறையைநோக்காது பிறர் குறையைத் தீர்ப்பர் என்பதுகருத்து. விழுமியோர் எ. தீர்க்கிற்பார் ப. விழுமியோர் காரணப்பெயர் - விழுமம் பகுதி, ஈறுதொகுதல் விகாரம், இ சாரியை, ஆர பலாபால் விகுதி, விகுதி ஆ ஓ ஆகத்திரிதல் சந்தி. கறையிருள் இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். தீர்க்கிறபார் எதிர்காலப் பிறவினை வினைமுற்று - தீர பகுதி, க் சந்தி, கில் ஆற்றலுணர்த்தும விகுதி, அனைத்தும் ஒருபகுதி, ல் ற ஆகத்திரிதல் சந்தி, ப இடைநிலை, ஆர பலாபால் விகுதி. தீர எனனும் பகுதி தனவினை பிறவினைகட்குப் பொதுவானதால் சந்தி பெறாது தீர கிற்பான் எனத்தன்வினையில்வரும. (௩௯)

40. நலலாய் - அழகுள்ளவளே, இங்கு - இவ்வுலகத்தில், அனபு இல்லானுக்கு - அன்பில்லாதவனுக்கு, இடம் பொருள் ஏவல் - இடம்பொருள் ஏவல்களாகிய, எல்லாம

இருந்து - உம (இவைகள்) எல்லாம் (ஒருசேர) இருந்தும் அவன்கு - அவ்வளவில்லாதவனுக்கு, என்செய்யும - யாது பயனைகொடுக்கும், மொழி இலாக்கு - பேசசில்லாத ஊமைகளுக்கு, முதநூல - பழையநூல்கள், ஏது - யாது பயனைதரும், தெரியும் விழி இலாக்கு - பார்க்குஙகணக ளில்லாத அநதகர்களுககு, விளககு ஏது-விளக்கொளியாது பயனைத்தரும.

புணணியநதருதறகுக் கருவிகளாகிய இடம, பொருள ஏவலகள தனனிடத இருபபினும் அன்பிலாதவன அவைகளாற பயன அடையான எனபதுகருதது. இடம்பொருள ஏவல எ. செய்யும் ப. எவன என்னுங்குறிப்பு வினையாலணையுமபெயா இடைகுறைடாய எனஎன நின்றது. இதுஅகரசசாரியைபெறறு எனன எனவும், ஐசாரச்சாரியை பெறறு எனனை எனவும் வரும். மறறு அசைநிலை. உமமை இழிவு சிறபபு.

41. பொன் செய்த - பொனனினாற் செயயபபட்ட, அதிாவளையாய் - ஒலிககின்ற வளையலையுடையாய, இரு நீா-பெரியகடல் சூழநத, வியன - பரநத, உலகம - உலகத்துளளவா, இனசொல் ஆல் அனறி - இனிய சொறகளாலலலாமல், வனசொல ஆல் - கடுஞசொறகளால், என்று உமஎபபொழுதும், மகிழாது-மகிழ்ச்சியடையாா. கடல-சமுததிரம், தண் என்கதிா - குளிாநத கிரணங்களை யுடைய சநதிரனது, வரவு ஆல் - வருகையால், பொங்கும் - பொஙகாநிறகும், அழல்கதிா ஆல் - வெப்பம் பொருநதிய கிரணஙகளையுடைய சூரியனது வருகையால, பொங்காது - பொஙகமாட்டாது.

உலகினர் இனியசொல்லால்மகிழ்வாரேயல்லாமல்கடுஞ் சொல்லால் மகிழார் என்பது கருத்து. உலகம் எ. மகிழாது ப. உலகம் இடவாகுபெயர். இதுபொருளால் உயர்திணையே னும் சொல்லால் அஃறிணை யாதலால் மகிழாது என்றார். ஏ அசைநிலை. உம்மைமுற்று. (சுக)

42. வல்லோர் - (கல்வியறிவில்) வல்லவர், நல்லோர் - நல்லவரது, வரவுஆல் - வருகையால், முகமலர்கைகொண்டு - முகமலர்ச்சி கொண்டு, இன்புஉறீஇ - இன்பத்தை யடைந்து, அல்லோர் வரவுஆன் - தீயோரதுவருகையால், அழுங்குவர் - துன்பத்தை யடைவர், தேமா - மாமரமானது, தென்றல் வர - தென்றற் காற்றுவர, தளிர்காட்டி - தளிர்களைக்காட் டி, திருந்தும் - செழித்துநிற்கும், சுழல்கால்வர - சுழற்காற் றுவர, வருந்தும் - வருந்தாநிற்கும்.

கற்றோர் நல்லவர் வருகையால் மகிழ்ச்சியும் தீயவர்வரு கையால் துன்பமும் அடைவர் என்பது கருத்து. வல்லோர் எ. அழுங்குவர் ப. ஆல் ஆன் என்னும் மூன்றும் உருபுகள் ஏதுப்பொருளன. உறீஇ சொல்லிசை நிறைக்கவந்த உயிரள பெடை, நகைதொழிற்பெயர் நகுபகுதி, உகரக்கேடுசந்தி, ஐ விகுதி. (சுஉ)

43. எழுத்துஅறியார் - இலக்கணநூலைக்கற்றறியாதவரது, கல்விபெருக்கம் - கல்வியினது மிகுதி, அனைத்துஉம் - முழு தும், எழுத்துஅறிவார் - இலக்கணநூலைக் கற்றறிந்தவரை, காணின் - கண்டால், இலையாம் - இல்லையாம், சுரநீர் - ஆகாயசங்கையினது, மிகை - பெருக்கமானது, எழுத்து அறி வார் - எழுத்தினியல்பை யறிந்தபெரியோர், ஆயும் - ஆராய் கின்ற, கடவுள் - சிவபெருமானது, அவிர் - விளங்கும்,

சடை - சடையை, முன்கண்டஅளவுஇல் (தன்) முன்கண்ட அப்பொழுதே, வீயும்-ஒடுங்கும்.

இலக்கணநூல் கல்லார்கல்வி அது கற்றோர்முன்புபயன் படாது என்பதுகருத்து. அனைத்து எ. இலையாம் ப. எழுத்து தன்னையுணர்த்தும் நூலின்மேல் நிற்றலால் சாரியவாகுபெயர். பெருக்கம் மிகை தொழிற்பெயர்கள் - பெருகு பகுதி, ககரமெய் விரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி, அம் தொழிற்பெயர் விகுதி. மிகு பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ விகுதி. கண்ட பெயரொச்சத்தின் அகரவீறு தொக்குநின்றது. வீயும் செய்யும் என்னும் வினைமுற்று - வீ பகுதி, ய் சந்தி, உம் முற்றுவிகுதி. (சந)

**44.** ஆக்கும் - செய்துகொள்ளும், அறிவுஆன் அலது-கல்வியறிவினாலல்லாமல், பிறப்பு இன்ஆல் - குடிப்பிறப்பின் வகையால், மீகொள் - மேலாகக்கொள்ளுகின்ற, உடர்வு உயர்வையும், இழிவு (கீழாகக்கொள்ளுகின்ற) இழிவையும். வேண்டற்க - வேண்டுதலொழிக, அரவுஇன் (நஞ்சுள்ள) பாம்பினது, பருமணிகண்டு - பருத்தமாணிக்கத்தைக்கண்டு, நீக்குபவர்ஆர் - நீக்குவோர்யாவர், கடல்இன் கடு - கடலில் (தோன்றிய) நஞ்சை, எனறுஉம் - எப்பொழுதும, கவரார்-கொள்ளார்.

உயர் குலத்தனாயினும்கல்வியறிவில்லாதவனை இழிந்தவனெனவும்,இழிகுலத்தனாயினும் கல்வியறிவுடையவனையுயர்ந்தவனெனவுங் கொள்ளவேண்டும் என்பது இதனதுகருத்து. ஒருவன் தோ எ. வேண்டற்க ப. யார்ஆர் யகரமெய்கெடுதல் புணர்ச்சியில் விகாரம். வேண்டற்க எதிர்மறை வியங்கோள வினைமுற்று - வேண்டு பகுதி, உகரக் கேடு சந்தி, அல் எதி

பாறை விகுதி, அனைத்தும் ஒருபகுதி, லகரம் றகரமாகத்திரிதல் சந்தி, க வியங்கோள்விகுதி. உம்மைமுற்று. (௪௪)

45. இந்த - இவ்வுலகத்தில், ஒருவர்க்குகுணம் - ஒருவருக்குக்குணம், உண்டெனினும் - உளதாயிருப்பினும், கீழ்கொண்டுபுகல்வது - கீழாயினோர் எடுத்துப்பேசுவது, அவர் குற்றம் ஏ. அவர்களதுகுற்றத்தையே யாம், வண்டு - வண்டுகள், செழும்பொழில்வாய்-செழித்த சோலையினிடத்துள்ள, மலர்ச்சேக்கை - பூவாகியமெத்தைகளை, விரும்பும் - விரும்பாநிற்கும், காய்கைவிரும்பும்கனி - காக்கைவிரும்பாநின்றகனி, வேம்புஎன்ற ஐ-வேப்பம்பழம் அல்லவா.

ஒருவனுடைய குணத்தை மேன்மக்கள் எடுத்துப்பேசுவார் குற்றத்தைக்கீழ்மக்கள் எடுத்துப்பேசுவாரென்பது கருத்து. புகல்வது எ. குற்றம் ப. கீழ்கீழ்மகன்மேல் நிற்றலால் ஆகுபெயர். சேக்கை படுக்கப்படுவது என்னும் பொருள் மேல்நிற்றலால் செயப்படு பொருளில்வந்த தொழிற்பெயர் - சே பகுதி, க சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, ஐ தொழிற்பெயர் விகுதி. சே படுத்தல். உம்மை உயர்வுசிறப்பு. ஏ பிரிநிலை, ஆ வினா. (௪௫)

46. மடவரால் - இளமைப்பருவமுடையவளே, ஒள்புலவர் - ஒளிபடைபுலவரது, உடல்இன் சிறுமைகண்டு - உருவத்தின் சிறுமையைப்பார்த்து, கல்விகடல்இன் (இவர்களது) கல்வியாகிய சமுத்திரத்தினது, பெருமை - பெருமையை, கடவார் (ஒருவரும்) கடக்கமாட்டார். கதிர் (சூரியனுடைய) ஒளிபோல் (கலந்து) காணும் (எல்லாப்பொருளையும்) பார்க்கின்ற, ஒளி (கருமணியின்) ஒளியானது, தான் கண் அளவு ஆய் நின்றதூஉ - தான் (இருக்கும்சிறிய) கண்ணினளவாக

அமைந்து நின்றதோ, விண்அளவு ஆயிற்றோ - (தான்பார்க்கும்பெரிய) ஆகாயத்தினளவாக அமைந்து நின்றதோ, விளம்பு (நீ) சொல்லுவாய்.

உருவிற்சிறியவரும் அறிவிற் பெரியவராவார் என்பது கருத்து. ஒருவர்தோ எ. கடவார் ப. மடவரல் மடவரால் விளியுருபு. உடலின்சிறுமை, சடலின்பெருமை பண்புத்தற்கிழமைப் பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர்கள். ஓ இரண்டும் வினாப்பொருன. விளம்பு ஆய் விகுதியோடு புணர்ந்து குன்றிய முனணிலை யேவலொருமை வினைமுற்று. (சுசு)

47. கற்றுஅறிநதோர்- (நூல்களை) கற்றறிந்தபெரியோர்-கைம்மாறு - (பிறர்செய்யும்) பிரதியுபகாரத்தை, உகவாமல்-விரும்பாமல், மெய்வருநதி - தேகம்வருந்தி, தம்ஆல் இயல் உதவி - தம்மாற்கூடிய வுதவியை? தாம்செய்வார் - தாமே செய்வார், முளைக்கும் எயிறு - முளைக்காநின்ற பறகள், நாவிற்கு (தமக்கோருதவியுஞ்செய்யாத) நாக்கினுக்கு, வலியன - கடினமுள்ள பொருள்களை, தாம் மென்று - தாமே மென்றுகொடுத்து, முதிர்சுவை - மிகுநதமதுரத்தை, விளைக்கும் - உண்டாக்கும்.

கற்றவர் பிரதியுபகாரத்தைவிரும்பாமல் தம்மாற்கூடிய உபகாரத்தைப் பிறர்க்குச் செய்வார் என்பது கருத்து. கற்றறிந்தோர் எ. உதவி செ. செய்வார் ப. வருந்தி என்னும இறர்தகாலச் சினை வினையெச்சம் செய்வார் என்னும் முதல் வினைமுற்றோடு முடிந்தது. வருந்து பகுதி. அம்மா வியப்பிடைச்சொல். நான்காம் உருபு கோடற்பொருட்டு. (சஎ)

**48.** நேரிழாய் - பெண்ணே, பேர்அறிஞர் - பேரறிவுடையோர், தாக்கும் - வருத்துகின்ற, பிறர்துரம் - பிறரது துன்பத்தை, தாங்கி (தம்) மேற்கொண்டு, வீரம் ஒடு - மனம் அஞ்சாது, காக்க விரைகுவார் (அவரை) பாதுகாக்க விரைந்துசெல்வார், மெய் - உடம்பில், சென்று தாக்கும் - போய் மோதும், வியன்கோல் அடி - பெரியகோலினது அடியை, கை - கையானது-கடிது சென்று-விரைந்துபோய், தன்மேல் தாங்கும் - தன்மேலே தாங்காநிற்கும்.

அறிவுடையோர் பிறர்துன்பத்தை விரைந்து நீக்குவர் என்பது கருத்து. பேரறிஞர் எ. விரைகுவார் ப. அறிஞர் காரணப்பெயர் - அறி பகுதி, ஞ் பெயரிடைநிலை, அர் பலர்பால் விகுதி. தாக்கும் பெயரெச்சம் தாக்கு பகுதி, உகரக்கேடு சந்தி, உம்எச்சவிகுதி - இது துயரம் என்னும வினைமுதற் பொருளோடு முடிந்தது. விரைகுவர் உயர்திணைப் பலர்பாற் படர்க்கை எதிர்கால வினைமுற்று - விரைபகுதி, கு சாரியை, வ் எதிர்காலவிடைநிலை, ஆர் விகுதி. ஏ அசைநிலை. (சு அ)

**49.** பிறைநுதால் - பிறைபோலும் நெற்றியை யுடையவளே, அறிவு உடையார் அன்றி - அறிவையுடையவரோ யல்லாமல், அதுபெறுர் - அவ்வறிவைப்பெறுதமூடர், தம்பால்- தம்மிடத்து, செறி பழியை - வரும்பழிக்கு, சிறிது உம் அஞ்சார் - சற்றும்பயப்படார், வண்ணம் செய்-அழகுசெய்யும், வாள் - ஒளியை யுடைய, விழி ஏ அன்றி - கண்களே யல்லாமல், மறை (ஒளி) இழந்த, குருட்டுக்கண் - குருட்டுக் கண்களானவை, இருளை கண்டு-இருளைப்பார்த்து, அஞ்சும் ஓ- பயப்படுமோ (பயப்படா என்றபடி)

அறிவுடையோர் பழிக்கு அஞ்சுவர், அறிவில்லார் அஞ்சார் என்பது கருத்து. ஐயுருபு கோடற்பொருளில்வந்ததால் உருபு மயக்கம். பிறை நுதல் பிறைநுதலால் விளியுருபு. பிறைபோன்ற நுதலையுடையாள் எனப்பொருள் படுதலால் உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பிறை தொழிலாகு பெயராய்ச் சந்திரன்மேல் நின்றது. பிற பகுதி, அகரந் தொகுத்தல், ஐ தொழிற்பெயர் விகுதி. அறிவுடையார் என்பதின் இறுதியில் பிரிநிலை ஏ தொகுத்தல். ஏ பிரிநிலை, குருடுகண் குருட்டுக்கண் பண்புத்தொகை ஆதலால் எருத்து மாடு என்றாற்போலஇடையில்தன்னொற்றிரட்டியது. ஓ எதிர்மறைப் பொருட்டு. (௪௧)

50. தக்கார்க்கு ஏ - நல்லவர்களுக்கே, ஈவர் - கொடுப்பார், தகார்க்கு - தீயவருக்கு, அளிப்பார் - கொடுப்பவர்; இல் என்று (உலகில்) இல்லையென்றுதெரிந்து, விழுமியோர் - மேலோர், மிக்கார்க்கு - வரம்பு கடந்த நடையையுடையவர்க்கு, உதவார் - கொடார். எ கால் உம் - எப்பொழுதும், நீர் - நீரை, நெல்லுக்கு இறைப்பது ஏ அன்றி - நெற்பயிருக்குஇறைத்தலே யல்லாமல், காடு - காட்டில், முளி - உலர்ந்த, புல்லுக்கு - புல்லினுக்கு, போய் இறைப்பா ஓ - போயிறைப்பாரோ (இல்லை என்றபடி)

மேலோர் நல்லோருக்கல்லாமல் தீயோருக்குக்கொடார். என்பதுகருத்து. விழுமியோர் எ. உதவார் ப. தக்கார், மிக்கார் உயர்திணைப் பலர்பாற் படர்க்கை இறந்தகால் வினையாலணையும் பெயர்கள். தகு, மிகு பகுதிகள், முதனிலை யெழுத்தாய்த் தோன்றிநின்ற ககரமெய் இடைநிலை, உகரக்கேடு சந்தி, ஆர்பலர்பால் விகுதி. இறைப்பது எதிர்கால இடை

நிலை பெற்றுவந்த தொழிற்பெயர் - இற பகுதி. ஏ இரண்டும் பிரிநிலைப்பொருளன. ஓ எதிர்மறைப்பொருட்டு. (௫௰)

51. நல்லாய் - அழகுள்ளவளே, கேள் - கேட்பாய், நல்லார்செயும் கேண்மை - நல்லவா செய்யும் சிநேகம், நாள்தோறும் - எப்பொழுதும், நன்று ஆகும (வளர்ந்த) பயன்படும, அல்லார் - நல்லவரல்லாதவர்,செயும் கேண்மை-செய்யும் சிநேகம், ஆகாது - பயன்படாது. காய்-காயானது,முற்றின் - முதிர்நதுவரின், தின் - தின்னும், தீம் கனி ஆம்-மதுரமானபழமாம், இளந்தளிர் - இளந்தளிரானது, நாள்போய்-நாள்சென்று, முற்றின் - முதிர்ந்தால், என் ஆகிபோம்-யாது பயனபடும்.

நல்லவர் சிநேசம் வரவரப் பயன்படும், தீயவர் சிநேகம் அபபடி யாகாது கெடும் என்பது கருத்து. கேண்மை ஐ, நன்றுதும், ஆகாது ப. காட், கனி, தளிர் வினைமுதற் பொருளில் வந்த இகரவி குதியொடு புணர்ந்து குன்றிய தொழிற்பெயர்கள். தோறும் பன்மைப் பொருளில் வந்த இடைச்சொல், முற்றின் எதிர்கால வினையெச்சம் - முற்று பகுதி,உகரக்கேடு சந்தி, இன் எச்சவிகுதி. ஏ அசைநிலை.(௫௧)

52. பொன் ஏ-இலட்சுமியை யொத்தவளே,பொன்அணியும் - பொன்னுலாகிய ஆபரணத்தை யணிந்த, வேநதர்-அரசர்கள், புனையாத (அதனை) அணியாத, பெருங் கல்வி-பெரிய கல்விப்பொருள், மன்னும் - நிலைபெற்ற, அறிஞரை அறிவுடையோரை, ஒவ்வார் - ஒப்பாகார், மின்னும் - விளங்கும், அணி - ஆபரணங்களை, பூணும்-பூணுகின்ற,பிற உறுப்பு (கைகால்) முதலிய மற்றையவையவங்கள், அது - அதனை, புனையாத - அணியாத, காணும்-பார்க்கின்ற, கண்-கண்களை,

ஒக்கும் ஓ - ஒப்பாகுமோ, (ஆகாஎன்றபடி) காண் (நீ) பார்.

அரசர்கள் கற்றவர்களை யொப்பாகாரகள்என்பதுகருத்து. வேந்தர் எ. ஒவ்வார ப. மன்றும் இடைச் சொல்லடியாகப்பிறந்த பெயரொச்சம் - மன் இடைச்சொற்பகுதி, ன் சந்தி, உம் எச்சவிகுதி, இது இறந்தகாலத்தின்மேல் நின்றது - ஒவ்வார் இடைச்சொல்லடியாகப் பிறந்த எதிர்மறைவினைமுற்று - ஒ இடைச்சொற்பகுதி, வ் சந்தி, வ் விரித்தல் விகாரம், ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒருபகுதி, ஆர் பலர்பால் விகுதி, விகுதியின் ஆ முதற்குறை. ஒக்கும் உடன்பாட்டு வினைமுற்று - ஒ பகுதி, குசாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும சந்தி, உம்முற்று விகுதி. ஓ எதிர்மறை. மற்று அசைநிலை. அணிசெயப் படும்பொருள் உணர்த்தும் இகர விகுதியொடு புணர்ந்து குன்றிய தொழிற்பெயர். (ருஉ)

---

## புகழேந்திப்புலவர்
### இயற்றிய
### நளவெண்பா.

53. போது இல் - தாமரை மலரில், சினை - சினையையுடைய, ஆமை - ஆமையானது, வைகும் (கருவுயிர்க்க) தங்கும், திருநாடா - அழகிய நிடத நாட்டையுடைய நளனே, செம்மை - நடுவு நிலைமையை, நினையாமை - எண்ணு திருந்தலையே, பூண்டார் - மேற்கொண்ட கொடுங்கோ லரசருடைய, நெறி - ஒழுக்கங்கள், காதல் (பிறர் மனைவிமேல்) ஆசை(வைத்தலும்) கவறுஆடல் - சூதாடுதலும், கள் உண்டல் - கள்ளுண்ணுதலும், பொய் மொழிதல் - பொய் பேசுதலும், ஈதல் (பிறருக்கு) கொடுத்தலை, மறுத்தல் - தடுத்

தனும் (ஆகிய) இவை - இவைகளேயாம், கண்டாய் - தெளி வாய்.

புட்கரனோடு நளன் சூதாடத் தொடங்கிய காலத்து மந்திரிகள் மறுத்துக் கூறுவது. கொடுங்கோலரசர் செய்கை கள் இவைஎன்பதுகருத்து. நெறிபால்பகா அஃறிணைப்பெயர் ஆதலால் இவை என்னும்பயனிலைகொண்டது. திருநாடாளன் னும் விளிபுருபு கண்டாய் என்னும் முற்றுப் பயனிலை கொண்டது. (ருங)

54. அறத்தை - தருமத்தை, வேர்கல்லும் - வேரோடு பறிக்கும், அருநரகு இல் - (அடைதற்கு) அரியநரகத்தில், சேர்க்கும் - சேர்ப்பிக்கும், திறத்தை ஏ கொண்டு - வலிமை யையே மேற்கொண்டு, அருளை - சீவகருணையை, தேய்க்கும்- குறைக்கும், மறத்தை ஏ-பாவத்தையே, பூண்டு (அணியாக) பூண்டு, விரோதம் (பலரோடும்) பகை (கொள்ள) செய்யும்- செய்விக்கும் (ஆதலால்) பொய் - பொய் (வடிவமாகிய) சூது ஐ-சூதாடலை, மிக்கோர்கள் - பெரியோர்கள், தெரிந் தும்(அதனியல்பு) தெரிந்திருந்தும், தீண்டுவர் ஓ - பரிசிப் பரோ, என்றார் - என்று மந்திரிகள் சொன்னார்கள்.

இப்பிறப்பிற் செய்யும் தருமமுதலியவற்றைக் கெடுத்து மறுபிறப்பிலும் நரகத்திற் சேர்ப்பிக்கும் என்பது கருத்து. மந்திரிகள்தோ எ, என்றார் ப. கல்லும், சேர்க்கும், தேய்க் கும், செய்யும் இவைவினைமுற்றுகள். கல்பகுதி, ல்சந்தி,உம் முற்றுவிகுதி. தெரிந்து என்பதனிறுதியில் உயர்வு சிறப்பும் மைதொகுத்தல். ஏ இரண்டும் பிரிநிலைப்பொருளன. ஓ எதிர் மறை. (ருச)

55. உரு அழிக்கும் - தோற்றத்தையும் கெடுக்கும், உண்மை - வாய்மையையும், உயர்வு - உயர்ச்சியையும், அழிக்கும் - கெடுக்கும், வண்மை (பிறர்க்கு) உதவி (அருப்) திரு - செல்வத்தையும், அழிக்கும் - கெடுக்கும், மானம் - பழிக்கு அஞ்சுதலையும், சிதைக்கும் - கெடுக்கும், மருவும் - மனங்கலந்து நடக்கும், ஒருவர்ஓடு - ஒருவரிடத்தில் கொண்ட, அன்பு அழிக்கும் - அன்பினையும் கெடுக்கும், சூது - இச்சூதாட்டம் (கருங்கெடுதிகள்) ஒன்றுஅல்ல - பல (ஆதலால்) நல்லோர் - மேலோர், புரிந்து - விரும்பி, சூது பொருவர் ஓ - சூதுபோர்செய்வாரோ (செய்யாரென்றபடி)

தோற்ற முதலியவற்றைச் சூது கெடுத்தலால் பெரியோர் ஆடார் என்பது கருத்து. நல்லோர் எ. பொருவரோ ப. சிதைக்கும் பிறவினை வினைமுற்று. சிதைபகுதி க் தோற்றமு[illegible] க்கேடும் சாதி, உம்விகுதி, கு சாரியை. இப்பகுதி தன்வினைபிறவினைகட்குப் பொதுவானதால் இங்குப் பிறவினைமேல் நின்றது. பொருவர் எதிர்கால வினைமுற்று - பொரு பகுதி, வ் எதிர்கால இடைநிலை, அர் பலர்பால் விகுதி. ஓ எதிர்மறை. (௫௫)

56. வேலை - சமுத்திரம், கரைஇழந்தால் - கரைகடந்து வந்தாலும், வேதநெறி - வேதமார்க்கம், பிறழ்ந்தால் - முறை பிறழ்ந்தாலும், ஞாலமுழுதும் - உலகமுழுதும், நடு இழந்தால் - நடுவுநிலைமையைக் கைவிட்டாலும், செங்கோலவர் - செங்கோலையுடைய அரசர்கள், சீலம்ஒழிவர் ஓ, நல்லொழுக்கினின்றுந்தவறுவாரோ, செம்மைஉரை - வாய்மைச்சொல், திறம்பாத - தவறாத, செய்கை அழிவர் ஓ - செயலையும் விடுவரோ, (விடார் என்றபடி.)

இவை நுவறிலும் நீதியையுடைய அரசர் சிலம் ஒழி ரலும், நற்செய்கையழிதலும இல்லையென்பது கருத்து. செங் கோலவர் எ. ஒழிவரோ அழிவரோ ப. ஞாலம் இடவாகு பெயர். திறம்பா ஈறுதொக்க எதிர்மறைப் பெயரெச்சம். ஞாலம் இடவாகுபெயர். உம்மை முற்று. ஓ இரண்டும் எதிர் மறைப்பொருளன. (ருசு)

57. இன அடிசில் - இனிய உணவை (உண்ணுமிடத்து) புகரு - வந்து, அளையும் - அளைகின்ற, தாமரை - தாமரை மலர்போன்ற, கை-கையையும், பூ-தாமரைமலர்போல,நாறு ம் - பரிமளிக்கும், செய்யவாய் - செவந்தவாயையுமுடைய, மக்களை - பிள்ளைகளை, இங்கு - இவ்வுலகத்தில, இல்லாதவர் - பெறாதவர், பொன உடையர் ஏனும் - பெருஞ்செல்வத்தை யுடையவராயினும், புகழ்உடையர் ஏனும் (அதனால்) கீர்த் தியையுடையவராயினும், மறறு (அது) ஒழிந்த,என்உடையர் ஏனும் - யாதுபொருளை யுடையவராயினும், உடையர் ஓ- (அவற்றால் ஆயபயனை)உடையவராவாரோ(ஆகாரென்றபடி)

செல்வமபுகழ் முதலியவற்றை யுடையவராயினும் மக் களைப் பெறாதவர்களுக்கு அவற்றாற் பயனில்லை என்பது கருத்து. மக்களை இல்லாதவர் எ. உடையரோ ப. அடிசில் தொழிலாகுபெயர் - அடு பகுதி, உகரக்கேடு சந்தி, இ சாரி யை, சகரமெய் விரித்தல்விகாரம், இல் தொழிற்பெயர் விகு தி. மக்கள் காரணப்பெயர் - மக பகுதி, அகரவீறு தொகுத தல, கள் பலர்பால்விகுதி. செய்ய பண்படியாகப் பிறந்த குறிப்புவினைப் பெயரெச்சம் - செம்மை பகுதி, ஈறுகெடு தலும், ஈற்று மகரம் யகரமெய்யாகத் திரிதலும், யகரந் தோனறுதலும் சந்தி, அ பெயரெச்சவிகுதி. (ருஎ)

58. இன்முகத்து - இனியமுகத்தையும், முன்னம் (தம்) முன்னே, குறுநுதல் ஐ - வருநுதலையுடைய, கிண்கிணி-சதங்கையை (அணிந்த) கால் - காலையும் உடைய, கோ-கண்போன்ற, மக்கள் - பிள்ளைகளது, பால்வாய் - பால் (மணக்கும்) வாயிலுள்ள, சிறுகுதலை - சிறியகுதலைசொற்களை, கேளாத செவி - கேளாதகாது, சொன்ன (பெரியோர்) கூறிய, கலையின்-நூல்களது, துறை அனைத்துஉம்-பொருள் முழுதிலும், தோயந்தால் உம்-படிந்திருப்பினும், என்னபயன் உடைத்து ஆம் - யாதுபயனை யுடையதாம் (இல்லையென்றபடி)

தம்புதல்வரது குதலைச்சொல்லைக் கேளாத செவி சகல நூற் பொருளிலும் படிந்திருப்பினும் பயன்படாது என்பது கருத்து. செவி எ. என்னபயனுடைத்தாம் ப. பொன்னின் குறுதலைக் கிண்கிணிக்கால் எனவும் பாடம் உண்டு. அதற்கு பொன்னாற்செய்த சேர்ந்த தலையையுடைய எனப்பொருள்கொள்க. சொன்ன இறந்தகாலப் பெயரெச்சம் - சொல் பகுதி, லகரம் னகரமாகத் திரிதல் சந்தி, ன் இறந்தகால இடைநிலை, அ எச்சவிகுதி. உம்மை இரண்டனுள் முன்னது முற்று. பின்னது உயர்வுசிறப்பு. (௫௮)

59. சினம் - கோபத்தையும், கதிர்-ஒளியையும் உடைய, வேல் - வேல்போன்ற, கண் - கண்களை யுடைய, மடவாய்-தமையந்தியே, செல்வர் பால் - செல்வம் உடையவரிடத்து, சென்று - போய், எனக்கு ஈ என்னும் - எனக்கு (ஒன்றை) கொடு என்னும், இமாற்றம் - இந்த இரப்பு வார்த்தை, தனக்குஉரிய (முன்செய்தபுண்ணியத்தால்) தனக்குக் காணியாகிய, தானம் - பரலோகத்தை, துடைத்து (பற்றற) கெடுத்து, தருமத்தை - புண்ணியத்தை, வேர்பறித்து - வேரோடு

கலைந்து, மானம் - நாணத்தையும், துடைப்பது - போக்குவதாகிய, ஓர்வாள் - ஒருவாளாம், கண்டாய - தெளிவாய்.

நாடுதோற்றபின் வீமன் நகரத்திற்குப்போகலாமென்ற தமயந்தியை நோக்கி நளன் கூறுதல். இரப்புவார்த்தை தரும முதலியவற்றைக் கெடுக்கும் என்பது கருத்து. இம்மாற்றம் எ. வாள் ப. மடவாள் மடவாய் விளியுருபு. இது கண்டாய்என்னு முன்னிலை யொருமை வினைமுற்றோடு முடிந்தது. துடைத்து, பறித்து என்னும் இறந்தகால வினையெச்சங்களை தனித்தனி துடைப்பது என்னும் வினைமுற்றைக் கொண்டன. (௫௯).

---

## வீரகவிராயர்

### இயற்றிய

## அரிச்சந்திரபுராணம்.

60. உயிர்க்கு - உயிர்களுக்கு, சேய்மை - தூரம்எனவும், அண்மை - சமீபம்எனவும், இல் - இல்லாமல், ஒருதுணைஎன (அபேதமாய்நின்ற) ஒருதுணையெனறு (கற்றோர்) சொல்ல, சிறந்த - மேம்பட்ட, வாய்மைஆல் - சத்தியத்தால், அகம் - மனம், தூய்மைஆம் - புனிதமாம், மற்றுஇலை - வேறொன்றுல (புனிதம் ஆதல்) இல்லை, சொல்லின் - சொல்லுமிடத்து புறதனை (உடம்பின்) புறத்தை, தூய்மைசெய்வது - புனிதம் செய்யும் பொருள், நீர் அலால் - தண்ணீரல்லாமல், வெறுஉளதஓ - வேறு பொருளுண்டோ, நோய்மை செய்யின்உம் - துன்பத்தைச் செய்தாலும், வாய்மைஏ - சத்தியமே,

எமக்குநோன்பு - எங்களுக்கு விரதம், அறிதி (விசுவாமித்திரனே) அறிவாய்.

காசிபராசன் ஆணையால் கொலைசெய்ய அரிச்சந்திரனுந்தன மனைவியைக் கட்டிக்கொண்டு கொலைக் களத்திற்குச் செல்லும்போது விசுவாமித்திரன் நாம்நான் கொடுக்கவில்லை யென்று ஒரு பொய் சொல்லென இருவரும், அம்முனிவரைப் பார்த்துக் கூறுவது. சத்தியம் மனத்தைப் புனிதம் ஆக்குவதால் அதுவே எங்களுக்கு விரதமென்றார் என்பதாம். மற்றிலைபுறத்ததெனவும், நோன்பெமக்கறிதியெனவும் பாடம். நீ தோ எ. அறிதி ப. அகம உள - அங்கிருக்கு மனத்திற்கு ஆகலால் இடவாகுபெயர். மற்று பிறிது பொருளில் வந்த இடைச்சொல். அறிதி முன்னிலை யொருமை எதிர்காலவினை முற்று அறி பகுதி, த சாரியை, உகரக்கேடு சந்தி, இ முன்னிலையொருமை விகுதி. இது எதிர்காலத்தின்மேல் நின்றது. உம் ஓ-இரண்டும் எதிர்மறைப் பொருளன. (சு0)

61. புலையன் உம் - நீசனும், விரும்பாத - இச்சிக்காத, இ-இந்த. புன்புலால - இழிந்த தசையையுடைய, யாக்கை - சரீரம் ஆனது, நிலைஎனு - நிலையையுடைய பொருள் என்று கருதி, மருண்டு - மயங்கி, உயிரின்உம் - உயிரைப்பார்க்கிலும், நெடிதுஉற - மிகவும், சிறந்தது - சிறந்ததின்றோ, தலைமைசேர்தரு - முதன்மைபெற்ற, சத்தியம் - சத்தியத்தினின்றும், பிறழ்வது - தப்புதல் - தரியேம் — பொறுக்கேம், கலை உணர்ந்த நீ - வேதமுதலிய நூல்களையறிந்தநீ, எமக்குஇது - எங்களுக்கு இதனை, கழறுவது - சொல்லுதல், அழகு - அழகா (அல்லவென்றபடி)

உயிரினுஞ்சத்தியஞ்சிறந்ததுஎனறுரர்என்பதுகருத்து. கழுறு
வது எ. அழுசோ ப. யாக்கை சுத்ததாதுக்களாற் கட்டப்படு
வது என்னும் பொருளில் வருதலால் செயப்படு பொருளில்
வந்த தொழிற்பெயர் - யா பகுதி, கு சாரியை, ககரத்தோற்
றமும் உகரக்கெடும்சந்தி, ஐ தொழிற்பெயர் விகுதி. எனு
இடைச்சொல் அடியாகப்பிறந்த இறந்தகால வினையெச்சம
என் பகுதி, ஆ எச்ச விகுதி. மருண்டு இறந்தகால
வினையெச்சம் மருள் பகுதி, டெடிதுற டெடிதுஉறு ஒரு
சொன்னீர்மைத்தாய் நின்றபகுதி, உகரக்கெடுசந்தி, ஆ எச்
சவிகுதி. உம்மை இரண்டனுள் முன்னது இழிவு சிறப்பு,
பின்னது உயர்வு சிறப்பு. ஓ எதிர்மறை. (௬௧)

62. இம்மை-இகபோகமும், அம்மை-பரபோகமும், வீடு
என-மோட்சமும்என்று, மறை - வேதங்கள், புலம்கொள-
விளங்க, இயம்பும் - சொல்லும், மும்மைஉம - மூன்றினை
யுங்களையும், தரும் - தராநின்ற, முறைமையுடைத்து என்னும்-
முறைமையை யுடையது தென்னும, நிலைமுரணி - நிலையி
னின்றும் தாண்தப்பி, ஆழ்வயிறு-குழிந்தவயிறறில், அடக்கி-
அடங்கச்செய்து, மீட்டு - மீள, உமிழ்கலாத - உமிழாத,
வெம்மைகூர - சூடுமிகுந்த, எரிவாய்நரகு - தீப்பொருந்திய
நரகத்தில், எம்மை-எங்களை, உய்க்கினும்-செலுத்தினாலும்,
மெய்ம்மையை-சத்தியத்தை, விடேம் (யாம்) விடமாட்டோம.

சத்தியம் எரிநரகத்திற் செலுத்தினாலும் அதைக்கை
விடேம் என்பது கருத்து. யாம் தோ-எ. விடேம் ப. உடைத
து அஃறிணையொன்றன்பாற் படர்க்கைக்குறிப்பு வினைமுற்று
உடைமை பகுதி, ஈறு கெடுதலும் தகரத்தோற்றமும் சந்தி,
து ஒன்றன்பால் விகுதி. நிலைமுரணி நீக்கப்பொருளில் வந்த

னுதாம் வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். மூரணிஇறந்த கால வினையெச்சம் முரண்பகுதி, இ எச்சவிகுதி. மீட்டு செயவெனெச்சத்திரிபு. உமிழ்கலா ஈறுகெட்ட எதிர்மறைப பெயரெச்சம் - உய்க்கின் எதிர்காலப்பிறவினை வினையெச்சம் உய்பகுதி, க் சந்தி, கு சாரியை, உகரக்கேடு சந்தி, இன எச்சவிகுதி. இப்பகுதிதன்வினைபிறவினைகட்குப் பொதுவான தால் இங்குப் பிறவினைமேல் நின்றது. உம்மை இரண்டனுள் முன்னது முற்று. பின்னது எதிர்மறை. ஆல் அசை. (சுஉ)

63. பதி இழந்தனம் (இப்போது) நாட்டை யிழந்தோம். பாலனை இழந்தனம் - புத்திரனையும் இழந்தோம், படைத்த-பெரற, நிதிஇழந்தனம் - பொருளையும் இழந்தோம், இனி-இனிமேல், நமக்கு உளது என - நமக்கு உள்ளதென்று, நினைக்கும்- எண்ணும், கதி இழக்கின் உம் - மோட்சத்தை யும் இழந்தாலும், கட்டுரை இழக்கிலேம் - சத்தியத்தைக் கைவிடோம், என்றார் - என்று சொன்னார்கள், அருந்தவன்-அரிய தவத்தையுடைய விசுவாமித்திரன், மதி இழந்து (தேவசபையிற்சொல்லிய) அறிவிழந்து, தன வாய் இழந்து (இவர்களைக்கொள்ளாமையால்) தன்வாய்ச்சொல் இழந்து, மறைந்தான் - உருக்கரந்தான்.

மோட்சத்தைக்கைவிடினும் சத்தியத்தைக் கைவிடேம் என்றார் என்பதுகருத்து.யாம்,அருந்தவன்எ.என்றார்,மறைந் தான் ப. இழந்தனம் தன்மைப் பன்மை வினைமுற்று இழ பகுதி, ந சந்தி, த் இறந்தகாலவிடைநிலை, அன்சாரியை, அம தன்மைப்பன்மை முற்றுவிகுதி. உம்மை, கதியிழத்தலில்லை என்பதுபொருள் ஆதலால் எதிர்மறை. (ருச)

# குமரகுருபர சுவாமிகள்
இயற்றிய
# நீதிநெறிவிளக்கம்.

64. அறம் உம் - தருமத்தையும், பொருள் உம் - திரவியத்தையும், இன்பம உம் - இன்பத்தையும், வீடு உம்-மோட்சத்தையும், பயக்கும் - கொடுக்கும், புறங்கடை - தலைவாயிலில், நல் இசை உம்-நல்லபுகழையும், நாட்டும் - நிலைநிறுத்தும, உறும் - மிகுந்த, கவல் ஒன்று - கவலையாகிய ஒரு செயல், உறற உழி உம் - வந்த விடத்தும், கைகொடுக்கும்-என்று கோல்போல நிற்கும் (ஆதலால்) சிறு உயிர்க்கு-சிலவாழ நாளையுடைய வுயிர்களுக்கு, உற்றதுணை - பொருந்தியதுணை, கல்வி இன் - கல்விப்பொருளைப் பார்க்கிலும. ஊங்கு-மிக்கபொருள், இல்லை-வேறில்லை.

அறம்பொருள் இன்பம் வீடு என்னும் பொருள்களையும் புகழையுந் தருதலால் உயிர்களுக்குக்கல்வியன்றிவேறுதுணையில்லை என்பது கருத்து. துணை. எ. இல்லை ப. வீடு விடு என்னும் முதனிலை திரிந்து நின்றதனால் முதனிலை திரிந்த தொழிற்பெயர். கவலை வினைப்பகுதியே தொழிற்பெயர்ப் பொருளில் வருதலால் முதனிலைத்தொழிற்பெயர். பயக்கும்செயயும என்னும் பொதுவினை முற்று-பயபகுதி, குசாரியை, ககரகதோற்றமும, உகரக்கேடும் சந்தி. உம்முற்றுவிகுதி.(சுச)

65. எ துணைய ஆயின் உம் - எவ்வளவின வானாலும், இடம் அறிந்து - நல்லாசிரியனைத் தெரிந்து, கல்வி - கல்வியை, உயத்து உணர்வு - ஆராய்ந்தறிதல், இல் எனின் - இல்லையானால், இல் ஆகும் (அக்கல்வி பயனபடுதல்) இல்லை

யாரும், உய்த்து உணர்ந்து உம் (அவ்வாறு தெரிந்து) ஆராய்ந்தறிந்தும், சொல்வன்மை (பிறருக்கு) சொல்லும்வலிமை, இன்று எனின் - இல்லையானால், என் ஆம் (அவ்வாராய்ச்சி) என்னபயன் படும், அஃது - அச்சொல்வலிமை, உண்டு எல் உளதானால், (அவ்வுண்மை) பொன் மலர் - பொன்னாற்செய்தமலர், நாற்றம் உடைத்து - வாசனையை யுடையதை (ஒக்கும்.)

நல்லாசிரியனிடத்துப் பாடங்கேட்டுப் பிறர்க்குவிளங்கச்சொல்லும் சொல் வலிமையுடைய ராயின் அது அரியது என்பது கருத்து. உணர்வு, உணர்ந்து, உண்டு என்பவற்றினிருந்து கொண்ட உணர்ச்சி, உண்மை எ. இல்லாதும், என்னும், ஒக்கும் ப. உய்த்துஇறநதகாலவினையெச்சம்உய்பகுதி, த் சந்தி, த் இறந்தகால விடைநிலை, உ எச்சவிகுதி. இது உணர்வு என்னுந் தொழிற்பெயரோடு முடிந்தது. (சுரு)

66. தாம் வருந்தி - தாம் வருத்தமுற்று, கற்றன - கற்றநூற்பொருள்களை, ஓம்பாது - பாதுகாவாமல், மற்றுஉம்சில வேறுஞ்சில நூல்களை, பரிந்து - வருந்தி, கற்பான்தொடங்கல் - சற்கப்புகுதல், கைத்தலத்த - கையிற்கிடைத்த, சருநதனம் - பெரியதிரவியத்தை, உய்த்து சொரிந்திட்டு -(புறத்தில்) கொண்டுபோயெறிந்து, ஆங்கு-அவ்விடத்தில, அரிப்பு அரித்து - அரிப்புக் கருவியால் அரித்து, எய்த்து - இளைத்து, பொருள் செய்திடல் - பொருள்தேடுதலை (ஒக்கும்.)

கற்றநூற்பொருளைப் பலகாலுஞ் சிந்திக்க வேண்டும் என்பது கருத்து. தொடங்கல் எ. ஒக்கும்தோ ப. ஓம்பாது எதிர்மறை வினையெச்சம் ஓம்பு பகுதி, உகரக்கேடு சந்தி,

ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, து சாரியை, உகரக்கேடு சந்தி, உ எச்சவிகுதி. கற்பான் எதிர்கால வினையெச்சம் கல் பகுதி, லகரம் றகரமாகத்திரிதல் சந்தி, பான் எச்சவிகுதி. சொரிந்திட்டு இறந்தகாலவினையெச்சம்சொரி பகுதி, து சாரியை, நகரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, இடு பகுதிப்பொருள் விகுதி, அனைத்தும் ஒருபகுதி, முதனிலையெழுத்தாய்த் தோன்றிநின்ற டகரமெய் இடைநிலை, உகரக்கேடுசந்தி, உ எச்சவிகுதி. எய்த்து இறந்தகாலவினையெச்சம் எய் பகுதி, த் சந்தி, த் இடைநிலை, உ எச்சவிகுதி. (௬௬)

67. கற்றோர்க்கு (நூல்களை) கற்றவர்க்கு, கல்வி நலன் ஏ - கல்வியினது அழகே, கலன் அல்லாமல் - ஆபரணமல்லாமல், மற்று ஓர் அணிகலம் - வேறொரு ஆபரணம், வேண்டாஆம் - (அழகுசெய்ய) வேண்டுதல் இல்லையாம், முழுமணி - பருத்த (இரத்தினங்கள், (அழகிய) பூணுக்கு - ஆபரணத்துக்கு முற்ற - ஒருக்காலும், பூண்வேண்டா (அழகுசெய்யவேறு) ஆபரணம்வேண்டுவன இல்லை, அழகுக்கு - அழகினுக்கு, அழகுசெய்வார் - அழகுசெய்வோர் யார் (உலகில்) எவர் (இல்லையென்றபடி)

கற்றோர்க்குக் கல்வியே ஆபரணம் என்பது கருத்து. அணிகலம் எ. வேண்டா ப. வேண்டா அஃறிணைப் பலவின்பாற்படர்க்கை எதிர்மறை வினைமுற்று - வேண்டு பகுதி, உகரக்கேடு சந்தி. ஆ விகுதி - இவ்விகுதியே எதிர்மறைப் பொருள்மேல் நின்றது. ஏ இரண்டனுள் முன்னது பிரிநிலை. பின்னது அசை. (௬௭)

68. கனங்குழாய் - கனத்த காதணியை யுடையவளே, சிறுஉளியால் (உருவில்) சிறியவுளியினால், கல்உம் - பெரிய மலையும், தகரும், உடைபடும், சொல் உலை - கொல்லன உலைக்

களத்தில் (உள்ள) கூடத்தினால் - சம்மட்டியினால், தகரா உடைபடா (ஆதலால்) முற்றும் (நூல்) முழுமையும், உணர்ந்தவர்-அறிந்தவர், இல்லை (உலகில்) இல்லை (ஆக) முழுவதும்-முழுமையும், கற்றனம் என்று (யாம்) கற்றேம் என்று, களியற்க-அகங்கரித்தல் ஒழியக்கடவன்.

பெரியகல்வி யுடையோரும் சிறியகல்வி யுடையோரால் அவமதிக்கப் படுவர் ஆதலால் செருக்கடைதலொழிக என்பது கருத்து. ஒருவன்தோ எ. களியற்க ப, முழுவதும் உம் இன்னிசை நிறைத்தலில்வந்த உயிரளபெடை. கணங்குழை கனமாகிய குண்டலத்தை யுடையாள் என நிற்றலால் பண்புத்தொகைப் புறத்துவந்த அன்மொழித் தொகைநிலைத்தொடர். இது விளியுருபேற்றுக் கணங்குழாய் எனநின்றது. ஆல் உருபு ஏதுப்பொருட்டு. களியற்க எதிர்மறை வியங்கோள் வினைமுற்று - களி பகுதி, யகரமெய் சந்தி, அல் எதிர்மறை விகுதி, அணைத்தும்ஒருபகுதி, க வியங்கோள்விகுதி. (சுஅ)

69. தம்இன் - தம்மைப் பார்க்கிலும், மெலியாரை-எளியவரை, நோக்கி-பார்த்து, தமதுஉடைமை - தமதுபொருளுடைமை, அம்மா - மிகவும், பெரிதுஎன்று - பெரியதென்று கருதி, அகம்மகிழ்க - மனமகிழக்கடவர் (அதுபோலன்றி) தம்இன்உம், தம்மைப்பார்க்கிலும், கற்றாரை - கற்றவரை, நோக்கி - பார்த்து, நாம்கற்றது - நாம்கற்றகல்வி, எல்லாம-எல்லாநூல்களையும் (உணர்ந்த) இவர்க்கு-இவர்முன், எற்று-எத்தன்மைத்தாம் (என்றுகருதி) கருத்துஅழிக - மனம்வருந்தக்கடவர்.

தம்மினும் எளியவரைப் பார்த்துத் தாம் அடைந்தபொருள் பெரிதென மனமகிழ வேண்டும் என்பதும், தம்மினுங

கற்றவரை நோக்கித் தாங்கற்றது சிறிதென மனம்வருந்த வேண்டும் என்பதும் இதனது கருத்து. ஒருவர்நோ எ. அக மகிழ்க, சருக்தழிக ப. கற்றதெல்லாம் எனப்பாடங்கொள்க எற்று விருவிடைச் சொல்லடியாகப் பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைக குறிப்பு வினைமுற்று-எ பகுதி, ற் சந்தி, று ஒன்றன் பால் விகுதி, கு உருபுமயக்கம். அம்மா வியப்பிடைச்சொல். (சுகூ)

70. இல்லார் (இருவகைச் செல்வங்களில் ஒன்றாயினும்) இல்லாதவர், குறைஇரந்து - குறைகளைச்சொல்லியாசகித்து, நம்முன்னர்-தமதுமுன்னே, நிற்பபோல் (தாழ்ந்து) நிற்றல் போல, தாம்உம் (அச்செல்வங்களையுடைய) தாமும், தலைவணங்கி - தலையால்வணங்கி, தாழுபெறின் (பிறரை) பணிந்து நடப்பாராயின் (அவாஅடைநத) கல்வி உடைமை-கலவிச்செல்வமும், பொருளஉடைமை-பொருட்செல்வமும், என்ற-என்று சொல்லப்பட்ட, இரண்டு செல்வம் உம் - இரண்டு செல்வங்களையும், செல்வம் எனப்படும் - செல்வங்களென்று (உயர்ந்தோரால் (சொல்லப்படும்)

இருவகைச்செல்வங்களையும்உடையோர்பணிந்துநடக்க வேண்டும் என்பதுகருத்து. இரண்டுசெல்வம் எ. செல்வமெனப்படும் ப. இரண்டு செல்வம் ஒருமையிற் பன்மைவந்த வழுவமைதி. என்ற இடைச்சொல் லடியாகப்பிறந்த இறந்த காலப்பெயரெச்சம் இதன் அகரவீறுதொருத்தல். என்பகுதி. இரநது இறந்தகால வினையெச்சம் இர பகுதி, தலைவணங்கி மூன்றாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். உம்மை இரண்டனுள் முன்னது முற்று. பின்னது உயர்வுசிறப்பு. (எ0)

**71.** ஆக்கம் பெரியார் - பெரியசெல்வ முடையவர், சிறியார் இடை - சிறியசெல்வ முடையவரிடத்து, பட்ட - உண்டாகிய, மீசெலவு - வரம்பிகந்த நடையை, காணின் - கண்டால், நனிதாழ்ப - மிகவுந்தாழ்வார். ஆக்கின - ஆராயின், துலைக்கு - துலாக்கோலில், மெலியது - நொய்யபொருளன்றோ, மேல்மேல் - மிகவும், எழசெல்ல செல்ல - உயரச் செல்லுந்தோறும், வலிதுஅன்றுஏ - திண்ணியபொருளுள்ளதுட்டல்லவா, தாழும் - தாழாநிற்கும்.

பெருஞ் செல்வமுடையவர் சிறியவரிடத் துண்டாகிய பெருமித நடையைக் கண்டால் தாழ்ந்து நடப்பார் என்பதுகருத்து-பெரியார் எ.தாழ்ப ப. கு உருபுமயக்கம்,செல்ல செல்ல தொழிற் பன்மைப் பொருளில்வந்த அடுக்கு. மேல் மேல் மிகுதிப் பொருளில் வந்த அடுக்கு. ஆக்கம் ஆகுதல் இது பொருள்மேல்நிற்றலால் தொழிலாகுபெயர்ஆகுபகுதி, ககரமெய் விரித்தல் விகாரம், உசரக்கேடுசந்தி, அம்தொழிற பெயர்விகுதி.

**72.** தன்னை வியப்பிப்பான் - தன்னை (பிறர்) நன்குமதிக்கவிரும்புவோன், தன் புகழ்தல் - தன்னைத்தானே புகழ்ந்து பேசுதல், தீசுடர் - தீவிளக்கை, நல்நீர் சொரிந்து - நல்ல நீரைவார்த்து, வளர்த்ததுஅற்று - விளக்கஞ்செய்தலை ஒக்கும், இன்பம் - சிற்றின்பத்தை, நயவாமைஅன்றுஏ - விரும்பாது நடத்தலல்லவோ, நலம் - அழியாத இன்பம் ஆவது (அது போல) தன்னைவியவாமை அன்றுஏ - தன்னைநன்குமதியாது நடத்தலல்லவோ, வியப்புஆவது - நன்குமதிப்பாவது.

வியப்பிப்பான் நன்குமதிக்கும் பொருட்டு எனப்பொருள்கொள்ளுதலும் ஒன்று. ஒருவன் தன்னைத்தானே நன்கு

மதித்தால் பிறரால் அவமதிப்பு அடைவான் என்பதும், நன்குமதியாது நடந்தால் நன்குமதிக்கப் படுவான் என்பதும் இதனது கருத்து. புகழ்தல், வியப்பு எ. வளர்த்தற்று, வியவாமை ப. வளர்த்தது அற்று வளர்த்தற்று தொகுத்தல். அற்று உவம வுருபிடைச்சொல் லடியாகப்பிறந்த ஒன்றன் பாற்படர்க்கைக் குறிப்பு வினைமுற்று - அன் இடைச்சொற் பகுதி. து ஒன்றன்பால் விகுதி, னகரமும தகரமும் றகரமாகத்திரிதல் சந்தி. வியப்பிப்பான் உயர்திணை ஆண்பாற்படர்க்கைப் பிறவினை வினையாலணையும் பெயா - வியப்பிபகுதி. ()

73. பிறர்ஆல் - அந்நியரால், பெருஞ்சுட்டு - நன்குமதிக்கப்படுதலை, வேண்டுவான் - விரும்புவோன், யாண்டுஉம்- எப்பொழுதும், மறவாமே - மறவாமல், நோறபது - அநுட்டிப்பதாகிய, ஒன்று - ஒருசெய்கை, உண்டு - உளது (அதாவது) பிறர்பிறர் - மற்றையோருடைய, சீர்எல்லாம் - குணங்களையெல்லாம், தூற்றி - பலரறியச்சொல்லி, சிறுமை (அவர்களது) குற்றத்தை, புறங்காத்து - வெளிவிடாமல்அடக்கி, பார் யார்க்குஉம் - எவ்வகையோர்க்கும் - தாழ்ச்சிசொலல்- பணிவான சொற்களைச் சொல்லுதல்.

புகழ்ச்சி விரும்புவோன் பிறருடைய நற்குணங்களையெடுத்துப் பாராட்டிப் பணிந்து நடக்கவேண்டும் என்பது கருத்து.நோற்பது எ.சொலல் ப. மறவாமே எதிர்மறைவினையெச்சம் மற பகுதி, வகரமெய் சந்தி, ஆ எதிர்மறை விகுதி, ஆனைத்தும் ஒருபகுதி, மே எச்சவிகுதி. தூற்றி இறநதகால வினையெச்சம் - தூற்று பகுதி, உகரக்கேடுசந்தி, இ எச்ச விகுதி, பிறர்பிறர் பன்மைப் பொருளில்வந்த அடுக்கு. (எங)

**74.** கற்பனை - கற்கும் - ஊழ்அற்றார் நல்வினையில்லா தவா, கல்விகழகத்து - கற்றோர் சபையில், ஒற்கம் இன்று - நாவடக்கமில்லாமல், ஊத்தைவாய் - அசுத்தமாகியவாயை, அங்காததல் - திறத்தல் (எத்தன்மைத்துஎனின்) மா மிருகங்களும், பறவை - பறவைகளும், புல்உரு - புல்லினாற்செய்த உருவத்தை (கண்டு) அஞ்சுவபோல், பயப்படுதல் போல, தமவல்உரு - தமது பெரியவுருவத்தை (கண்டு) அஞ்சன மின்-அஞ்சாதிருங்கள், என்பு-என்று சொல்லுதலை (ஒக்கும)

கல்லாதவர் கற்றோர்சபையில் வாயைத்திறந்தால் அவமதிப்பு அடைவார் என்பது கருத்து. அங்காத்தல் எ. ஒக்கும் தோ ப. உருவஞ்சன்மின்உருபும்பயனும்தொக்க இரண்டாம வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். அஞ்சன்மின் எதிர் மறை முன்னிலைப் பனமையேவல் வினைமுற்று - அஞ்சு பகுதி, உகரக்கேடுசந்தி, அல் எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒரு பகுதி. லகரம் னகரமாகத்திரிதல் சந்தி, மின் முன்னிலைப் பன்மை யேவல் விகுதி. வழக்கத்தில் அஞ்சாதிரும் என, உம் விகுதியாக வழங்கும். அங்காத்தல் தொழிற்பெயர். அங்கா பகுதி, தகரமெய் சந்தி, தல் விகுதி. (எச)

**75.** கற்றன் (தாம்) கற்ற நூற்பொருள்களை, கல்லார் - அறிவில்லாரது, செவிமாட்டி - காதிற்புகுத்தி, கையுறும் (அவரால்) அவமதிக்கப்படும், குற்றம் - தமது ஏ-தம்முடையதே (அல்லாமல்) பிறிதுஅன்று - அவருடையதல்ல (ஆகலால்) தாம்முற்று உணர்ந்தும் - தாம் எல்லாவற்றையும் அறிந்தும், அவர்தன்மை - அக்கல்லாதவரது தன்மையை, உணராதார் - அறியாதவர், தம் உணராத - தமதுதன்மை

யையறியாத, ஏதிலாரை - அயலாரை, நோவது- வெறுத்தல், எவன்-யாதுபயன்.

கற்றவர் அறிவில்லார் தன்மையை யறியாமல் கற்பிக்கில் அவரால் பின்பு அவமதிக்கப்படுவர் என்பது கருத்து. நோவது எ. எவன் ப. ஏதிலர் காரணப்பெயர் ஏதில் பகுதி, அர் பலர்பால் விகுதி. ஏதில் அந்நியம். மாட்டி இறந்தகால வினையெச்சம் மாட்டு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி. கையுறூஉம் இன்னிசை நிறைத்தலில் வந்த உயிரளபெடை. ஏ பிரிநிலை. உம்மை உயர்வுசிறப்பு. (எரு)

76. வயம்படை - வெற்றியைத்தரும் ஆயுதம், ஆண்அல்லவர்க்கு - ஆண்தன்மை யுடையவரல்லாதவர்க்கு, என்பயக்கும்-யாதுபயனைக் கொடுக்கும் (அதுபோல) கண்இல்சொலி கண்களாற் சொல்லி, செவிஇல்நோக்கும் - காதுகளாற்பார்க்கும், இறைமாட்சி (தாம்பெற்ற) அரசச்செல்வம், புண்ணியத்து இன்பாலது ஆயின்உம் - நல்வினையினது பகுதியதாறுலும், தண் அளிஆல் - குளிர்ந்த கிருபையால், மனபதை - மக்கட்பரப்பை, ஓம்பாதாரக்கு - பாதுகாவாதவர்க்கு, என ஆம் (அச்செல்வம்) யாதுபயன்படும.

அரசியல் புண்ணியத்தால் வந்ததாயினும் குடிகளைப் பாதுகாவாத விடத்துப்பயனில்லை என்பது கருத்து. இறைமாட்சி எ, என்னும் ப. இல் உருபு ஏதுப்பொருட்டு. ஆல் உருபு கருவிப்பொருட்டு. புண்ணியத்தின பாலது பண்புதறகிழமைப்பொருளில்வந்தஆறும்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். சொல்லி என்னும் இறந்தகால வினையெச்சம் நோக்கும் என்னும் நிகழ்காலப்பெயரொச்சத்தையும் ஆவ்வெ

ச்சம் இறை என்னும் வினைமுதற் பொருளையுங் கொண்டன. ஏ பிரிநிலை, உம்மை உயர்வுசிறப்பு. (எசு)

77. குடிகொன்று - குடிகளைவருத்தி, இறைகொள்ளும் வரிப்பணம் வாங்கும், கோமகன்கு - அரசனுக்கு, கன்று ஆ - கன்றினையுடைய பசுவினது, மடிகொன்று - மடியை யறுத்து, பால்கொளல் உம்-பாலைக்கொள்ளுதலும், மாண்பு- தக்கது. குடிஓம்பி - குடிகளைப் பாதுகாத்து, கொள்ளும் ஆறு (வரிப்பணம்) வாங்கும் வகையில், கொள்வோர்க்கு- வாங்குவோர்க்கு, மாநிதியம் - பெரியதிரவியம், வெள் ளத்தின் மேலும் - வெள்ளமென்னுந் தொகைக்கு மேலும், பல - பலவாக, காண்டும் (நாம) காண்போம்.

குடிகளை வருத்தி இறைவாங்கும் அரசியல் சிறுகும் என்பதும், குடிகளை வருத்தாது இறைவாங்கும் அரசியல் பெருகும் எனபதும் இதனது கருத்து. கொளல், நாம் ஏ, மாண்பு, காண்டும் ப. ஆறு ஆ தொகுத்தல் விகாரம். காண் டும் தன்மைப் பன்மைவினைமுற்று - காண்பகுதி, டும் தன் மைப்பன்மை விகுதி - இவ்விகுதி தெளிவுபற்றி எதிர்காலத் தின்மேல் நின்றது. ஓம்பி இறநதகால வினையெச்சம் ஓம்பு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி. ஏ அசைநிலை.(எஎ)

78. முடிப்ப முடித்து - முடிக்கு மலர்களைமுடித்து, பின் பின்பு, பூசுவ பூசி-பூசுங்கலவைகளைப்பூசி, உடுபப உடுத்து- உடுக்கும் உடைகளையுடுத்து, உண்ப உண்ணு - உண்ணும்உண வுகளையுண்டு (உயிர்த்தன்மைகாட்டி) இடித்து இடித்து (மந் திரி முதலாயினோர்) பலதரம் நெருங்கி, கட்டுரை கூறில், உறுதி மொழிகளைச் சொன்னால், செவி கொளா-காது செ டாத, கண்விழியா - கண்களைத் திறவாத அரசர்கள், நெட்

டயிர்ப்புழுடு உற்ற - பெருமூச்சோடு கூடிய, பிணம்-நடைப் பிணங்களாவார்.

தமக்கு வேண்டுவன மாத்திரங் கொண்டு குடிகளுக்கு வேண்டுவனவற்றை நோக்காத அரசர்கள் பிணங்களோ டொப்பார் எனபது கருத்து. விழியா எ. பிணம் ப. விழியா அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை எதிர்மறைவினையாலணையும் பெயா - இது சொல்லால் அஃறிணை யாதலால் பிணம் எனக்கூறினர். முடிபப, உடுப்ப, பூசுவ, உண்பஇவை பலவின்பாற் படர்க்கை எதிர்கால வினையாலணையும் பெயர்கள். உண்ணு செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம உண்பகுதி, ண் சந்தி, ஆ எச்சவிகுதி. (எஅ)

79. செங்கோன்மை - அரச நீதியாவது, ஒற்று இல்வேவுகாரரால், தெரியா (உண்மை) அறியப்படா (ஆதலால்) சிறைப்புறத்து - மறைவிடத்தில் (நின்று) ஓர் தும் என (நாமே) அறிவோம் என்று, பொன்தோளா (தமது) உழுகியதோளே, துணையாக-துணையாக (சென்று)தெரிதர்து உம்-ஆராய்ந் தறிந்தும, குற்றம் (நடந்த) குற்றத்தை, அறிவு அரிது என்று (முறையாக) அறிதல் கூடாதென்று, அஞ்சுவது ஏ - அஞ்சுதலேயாம்-சென்று (குடிகள்) போய், முறையிடின் உம் (தமது குறைகளைச் சொல்லி)முறையிட்டாலும், கேளாமை - செவிகொடா திருத்தல், அன்று (அரசநீதி) அல்ல.

குடிகள் சென்று முறையிடுதற்குமுன் குணங் குற்றங்களைத் தெரிந்து நடத்துதலே அரசநீதி என்பது கருத்து. செங்கோன்மை எ, அஞ்சுவது ப. ஆக ஆ ஈறுதொகுத்தல். ஓர்தும் தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று - ஓர் பகுதி,

னும் தன்மைப் பன்மை விகுதி. இது எதிர்காலத்தின்மேல் நின்றது. உம்மை இரண்டனுள் முன்னது உயர்வு சிறப்பு பின்னது இறந்தது தழுவிய எச்சப்பொருட்டு. ஏதேற்றம்.

80. நேர் நின்று - எதிர் நின்று, காக்கை - காக்கையானது, வெளிது என்பார் - வெண்ணிற முடையது என்று சாதிப்பவர், எனசொலார் - யாதுசொல்ல இசையார். தாய்கொலை - தாயைக் கொலைசெய்தல், சால்பு உடைத்து- தகுதியை யுடையது, எனபார் உம் - என்றுசொல்லுவாரும் உண்டு (உலகில்) உண்டு (ஆதலால்) ஏதிலார் - அயலார், யாது உம் புகல - எதையுஞ் சொல்ல, இறை மகன - அரசன், கோது ஒருவி (அவற்றில் உள்ள) குற்றத்தை நீக்கி, கொள்கை (குணத்தை) கொள்ளுதல், முதுக்குறைவு - பேரறிவாம.

நட்பில் மறைந்து நடக்கும் பகைவர் சொல்லுஞ்சொற்களை அரசன் ஆராய்ந்து கொள்ளவேண்டும் என்பது கருத்து. கொள்கை எ. முதுக்குறைவு ப. ஒருவி ஒரீஇ சொல்லிசை நிறைத்தலில்வந்த உயிரளபெடை. ஒருவுபகுதி. முதுக்குறைவுமுன்னுள்ள அறியாமை நீங்கல். உம்மை இரண்டும் இழிவு சிறப்புப்பொருளன. சால்பு உரிச்சொல் அடியாகப பிறந்த தொழிறபெயர் சால் உரிச் சொறபகுதி, புதொழிற் பெயர் விகுதி. (அ0)

81. கேடு-கெடுதி, கண் கூடு ஆ - பிரத்தியட்சமாக, பட்டது எனின் உம் (கண்களுக்கு) புலப்படுவதாயிருந்தாலும், கீழ்மக்கட்கு - அறிவில்லாதவர்களுக்கு, உணர்ச்சி உண்டு ஓ (தமக்குக் கெடுதியைத் தருஞ் செயல்களைவிட) அறிவுண்டாகுமோ, இல் ஆகும் - இல்லையாகும், மண்டு எரி

தான் - நெருங்கிய தீயானது, வாய் மடுப்பின் உம் (தன்னை) சூழ்ந்துகொண்டாலும், மாசுணம்-பெரும்பாம்புகள், போரா (அவ்விடத்தி னின்றும்) நீங்காது, பெருமூச்சு எறிந்து-பெருமூச்சுவிட்டு, கண்டுயில்வ - நித்திரை செய்யாநிற்கும்.

கண் கூடு பிரத்தியட்சம். அறிவில்லாத அரசன்கேடு வரினும் தீச்செயல்களி னின்று நீங்கான் என்பது கருத்து. உணர்ச்சி எ. இல்லாகும் ப. கேடு முதனிலை திரிந்த தொழிற் பெயர்-கெடுபகுதி. போராஎதிர்மறைபபலவினபாற்படர்க்கை வினைமுற்று வினையெச்சமாய் நின்றது. மண்டெரிவினைத் தொகைநிலைத்தொடர். உம்மைஇரண்டும்மிகுதிப்பொருளன.

82. வாங்குதும் - நாம் வாங்குகின்ற, கவளத்து - கவளத்தினின்று, ஒருசிறிது - ஒருசிறிய பங்கு, வாய்தப்பில்-வாயினின்று தவறினால், தூங்கும - அசைவாடி நிற்கும், களிறு ஓ - யானையோ, தூயர் உறு - துன்பத்தை யடையாவாம், அதுகொண்டு (தவறிய) அப்பொருளைக் கொண்டு, இங்கு ஊரும் - இவ்வுலகில் ஊருகின்ற, எறும்பு ஒருகோடி - ஒருகோடியெறும்புகள், ஆரும் - நிறைந்த, கிளை ஒடு (தமது) சுற்றத்தோடு, அயின்று - உண்டு, உய்யும் - பிழைக்கும.

தமது செல்வத்திற் சிறிது உலகினர் பலரும் அநுபவித்தறசமையினும் அதனைக்கண்டு அரசர்கள் மன நோவார் என்பது கருத்து. கிளைகிளைத்தல் அதுதொழிலாகு பெயராய்ச் சுற்றத்தின்மேல் நின்றது. அயின்று இறந்தகால வினையெச்சம் - அயில பகுதி, லகரம் னகரம் ஆகத் திரிதல் சந்தி, ற் இடைநிலை, உஎச்சவிகுதி. இவ்வெச்சம் உயயும என்னும் வினைமுற்றோடு முடிந்தது. (அஉ)

83. இறும் உயிர்க்கு உம்-சாகும் உயிர்களுக்கும், ஆயுள்-வாழ் நாளை (தரும்) மருந்து-மருந்தினை, ஒழுக்கல் (வாயில்) விடுதல், தீது அன்று-குற்றமல்ல (நன்மையைத்தரும் என்றபடி) (அதுபோல) அல்லனபோல் - ஆகாதனபோலக் காணப்பட்டு, ஆவன உம் - ஆகுங்காரியங்களும், சிலஉண்டு - சிலவுள (ஆதலால்) உறுதி - பயனை, பயப்ப - தருஞ்செயல்கள், கடைபோகா எனும் - முடிவுபெறா ஆயினும், இறுவரைகாறு உம் - சாங்காலம் அளவும், முயல்ப (விடாது) முயல்வார்.

பயன் தருஞ் செயல்கள் முடிவுபெறாதுவிடினும் தாம உள்ள அளவுமுயலவேண்டும் என்பது கருத்து. அறிவுடையோர் தோ எ. முயல்ப ய. முயல்ப பலர்பாற் படர்க்கை வினைமுற்று-முயல் பகுதி, ப பலர்பால் விகுதி. பயப்ப பலவின்பாற் படர்க்கை எதிர்கால வினையாலணையும் பெயர்-பய பகுதி, ப் சந்தி, ப் இடைநிலை, அ விகுதி. உம்மை மூன்றும் தேற்றப்பொருளன. (அ௩.)

84. கருமம் ஏ கண் ஆயினார் - கருமமே கண்ணாகவுள்ளவர், மெய்வருத்தம் (பொறுத்தற்கரிய) உடம்பினது வருத்தத்தை, பாரார் - நினையார், பசிநோக்கார் (சுட்டுவருத்தும்) பசியையெண்ணார், கண்துஞ்சார் (இடைவிடா நினைப்பால்) நித்திரை செய்யார், எவர் எவர்தீமை உம் (தங்கருத்திற்கு இடையூறுசெய்யும்) யாவர் தீங்கினையும், மேற்கொள்ளார்-கருத்தடைபடார், செவ்வி அருமை உம் - காலவேற்றுமையினது அருமையையும், பாரார்-நோக்கார், அவமதிப்பு உம் (பொறாமையாற் பிறர்செய்யும்) தனக்கு மதியாமையையும், கொள்ளார்-உட்கொள்ளார்.

முயற்சியுடையோர் அது முடியும் அளவுந் தமக்கு வருந்திங்குகளை நோக்கார் என்பது கருத்து. கருமமே கண்ணுயினுர் எ. பாரார், நோக்கார், கண்டுஞ்சார், மேற்கொள்ளார், பாரார், கொள்ளார் ப. எவ்வெவா எனபதின் முதல்நின்ற எவர் என்பதன் முதலெழுத்தல்லாதன கெடுதல் ந-உயிர்-சுக-சூ-உள், நெறிஎன்றமையால் கொள்க. ஏ பிரிநிலை. (அச)

**85.** பகை சிறிய எனின் உம் - பகைவர் அளவிற்சிறியர் ஆனுலும், ஓம்புதல் (அவர்பகைமையை) பாதுகாத்தலை, தேறுரா-அறியாதவர், பெரிதுஉம்-மிகவும், பிழைபாடு - பிழைபடுதலை, உடையார் - உடையவராவர், நிறை - நிறைந்த, கயம்-கயமாகிய, தாழ் - தாழ்ந்த, நீர் - நீரையுடைய, மடுவில்-மடுவினிடத்து, தவளை குதிப்பின் உம் - தவளை குதித்தாலும், யானை - யானையினது, நிழல் (தனது) தேகநிழலை, காண்பு அரிது-காணுதல்இல்லை.

உருவிற பெரிய யானையானுலும் நீரிற்பிரதி பிம்பித்த தனதுதேக நிழலை, உருவிற் சிறிய தவளையாற காணுதது போலர், துணைவலிமுதலிய வலிமையிற்பெரிய அரசரானுலும அவற்றுற் சிறிய அரசருடைய பகையை முன்னறிந்து பாதுகாவார் ஆனுல்அதனுல் பெருமையை யிழப்பர் என்பது கருத்து. தேற்ருர் எ. உடையர் ப. பாடுமுதனிலை திரிந்த தொழிற்பெயர் படுபகுதி. தேற்ருர் எதிரமறை வினையால் அணையும் பெயர்-தேறுபகுதி, றகரமெய்விரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, ஆர்பலர்பால் விகுதி, விகுதியின் ஆமுதற்குறை. (அரு)

**86.** கருவி இட்டு - சத்திரஞ்செய்து, ஆறறுவார் - (புண்ணை) ஆற்றுவோர், புண் (அந்தப்) புண்ணை, பொதிந்து வைத்

து-மறைத்துவைத்து, மூடார் - மூடுவோரில்லை (ஆதலால்) புறம் நட்டு - புறத்திற் சிநேகித்து, அகம்வேர்ப்பார் - உள்ளேகோபிப்பவராது, நஞ்சு - நஞ்சையொத்த, பகைமை-பகையை, வெளியிட்டு - மறைக்காமல், வேறுஆதல் வேண்டும் (அவரினின்று) நீங்குதல் தக்கது, கழி - மிகுந்த, பெருங்கண்ணோட்டம் - பெரியதாட்சிணியத்தை, செய்யேல்-செய்யாதே.

உட்பகையுடையோரை யஞ்சித் தம்மைப் பாதுகாத்தலும் அல்லாமல், அவர் இயல்பு அறியின் அப்பொழுதே யவரைக் கைவிடவேண்டும் என்பது கருத்து. நீ தோ - எ.செய்யேல் ப. நட்டு இறந்தகாலவினையெச்சம் - நள்பகுதி, இவ்வெச்சம் வேர்ப்பார் என்னும் எதிர்கால வினைமுற்றோடு முடிந்தது. வெயர் என்னும் பகுதிமுதல் நீண்டு இடையிலுள்ள யகரம் தொக்குவேர் எனநின்றது. நச்சுப்பகைமை உருபும் பயனும் தொக்க இரண்டாம் வேற்றுமைத்தொகை ஆதலால் மென்றொடர் வன்றொடர் ஆயிற்று. (அகூ)

87. கறுப்பு (ஒருவர்மேல்) கோபம், மனத்தஎனின் - தம் மனத்தினிடத்தன ஆனால், நல்லசெயின் உம் (அவர்கள் தமக்கு) நல்ல கருமங்களைச் செய்தாலும், அனைத்து எவை உம் - அந்நன்மைக ளெல்லாம், தீய ஏ ஆகும் - தீயகருமங்களாகவே முடியும், மாசுஇல் (ஒருவர்மேல்) கோபம் இல்லாத, மனத்தினவர் - மனத்தை யுடையவர்கள், எனைத்துணை உம் - எவ்வளவாயினும், தீய ஏ - தீயகருமங்களையே, செயின் உம் (தமக்கு) செய்தாலும், நல்ல ஆ - நல்லகருமங்களாக, காண்ப - காண்பார்.

ஒருவர்மேல் கோபம் உளதாயின் அவர்செய்யும் நல்லசெயலும் தீய செயலாம் என்பதும், கோபம் இல்லாதாயின் அவர்செய்யும் தீயசெயலும் நல்லசெயலாம் என்பதும் இதனது கருத்து. அனைத்தெவையும், மாசின்மனத்தினவர் எ. தீயவேயாகும், காண்ப ப. காண்ப பலர்பாற் படர்க்கை வினைமுற்று - காண்பகுதி, ப பலர்விகுதி, இவ்விகுதி எதிர்காலத்தின்மேல்நின்றது. (அஎ)

88. இனியவர் (தம்மேல்) விருப்ப முடையவர், என் சொல்லின் உம் - யாதுசொன்னாலும் (கடுஞ்சொல் என்றபடி) இன்சொல் ஏ (பின்பு நன்மையைத் தருதலால்) இனியசொல்லேயாம், இன்னார் (தம்மேல்) வெறுப்புடையவர், கனியும் மொழிஉம் (செவிக்கு) இனியசொல்லும், கடு ஏ (பின்பு தீமையைத்தருதலால்) விஷமாம். அனல்-நெருப்புப் போல, கொளுந்தும் - எரியும், வெம்காரம் - வெய்யகாரம் ஆனது, வெய்து எனின் உம் (முன்பு) வெம்மையதாயினும், நோய்தீர்க்கும் (பின்பு தண்ணிதாய்) நோயைத்தீர்க்கும், சிங்கி - விஷம்ஆனது, மெய்பொடிப்ப - உடம்பு புளகிப்ப, குளிர்ந்து உம் (முன்பு) தண்ணிதாயிருப்பினும், கொல்லும் (பின்பு கொடியதாய்) கொலைசெய்யும்.

வாக்கினாலாகிய பயனைச் சொல்லளவையால் நோக்காது அதன்குணங் குற்றங்களைநோக்கிக் கொள்ளவேண்டும் எனபதுகருத்து. சொலின்என்னும் எச்சத்தினின்று பிரிந்த சொல், மொழி எ. இன்சொல், கடு ப. காரம் தொழிற் பெயர் கார்பகுதி, அம்விகுதி இது தொழிலாகுபெயராய்ப் பொருள்மேல் நின்றது. இன்னார் பண்படியாகப்பிறந்த பெ

யர்ச்சொல் இன்றுபகுதி, ரகரமெய் விகுதி. ஏ இரண்டும் பிரிநிலைப்பொருளன. (அஅ)

**89.** நல்ஆறு - நன்னெறியில், ஒழுக்குஇன்தலை - ஒழுகும் ஒழுக்கத்தினிடத்து, நின்றார் - நின்றவர்கள், நல்கூர்ந்தும் - வறுமையடைந்தும், அல்லன - தீயகருமங்களை, செய்தற்கு - செய்ய, ஒருப்படார் - உடன்படார், பல்பொறிய - பலபுள்ளிகளையுடைய, செங்கண் - செவந்த கண்களையுடைய, புலிஏறு - புலிப்போத்து, அறபசித்து உம் - மிகவும்பசித்திருந்தாலும், பைங்கண் - பசியஇடத்தையுடைய, புனத்த - கொல்லையிலுள்ள, பைங்கூழ் - முதிராதபயிரை, தின்னா ஆம் - தின்னமாட்டாவாம்.

நல்லெறியில் நின்றவர் வறுமையடைந்தாலும் அந்நெறியில் நின்று தவறார் என்பது கருத்து. நின்றார் எ, ஒருப்படார் ப, நல்கூர்ந்து இறந்தகால வினையெச்சம் நல்கூர் பகுதி, ந் சந்தி, த் இடைநிலை, உ விகுதி. செய்தற்கு நிகழ்கால வினையெச்சம் செய்பகுதி, தல், அல் இரண்டும் சாரியைகள், உகரக்கேடும் லகரத்திரிபும் சந்தி, கு எச்சவிகுதி, உம்மை இரண்டும் உயர்வு சிறப்புப்பொருளன. (அகூ)

**90.** பெற்ற (தாம்) பெற்றபொருள்களை, சிறுக - அற்பமாக, பெறாதது - பெறாதபொருளை, பெரிதுஉள்ளும் - மிக்கதாக நினைக்கும். சிறுஉயிர்க்கு - சிலவாழ்நாள்களையுடைய உயிர்களுக்கு, ஆக்கம் (பெற்ற) செல்வத்தாலாகிய பயன். முற்றும் (தன்வாழ்நாள்) முழுதும், அரிது - இல்லை, எரிதழல் - எரியுந்தீ, வல்விறாய் - வலியவிறகு முதலியவிறாய்கள், வரவர - கிடைக்கக் கிடைக்க, வாய்மடுத்து - எரிக்கு

மாட (ஆவ்விராய்கள்) அழிய, மாயாது இரா (அத்தி) மாயா மல் இரா (மாயும் என்றபடி)

பெற்றசெல்வம் போதும் என்று மகிழ்கூர வேண்டும் என்பது கருத்து. ஆக்கம எ. அரிது ப. பெருந்தகை ஒன்றனை பாற்படாக்கை எதிர்மறை வினையாலணையும்பெயர் அதன் விகுதி தொக்குத்தல். வரவர தொழில்நிகழ்ச்சிப் பொருளில் வந்த அடுக்குத்தொடர். உளவாம் பெயரெச்சம உள் பகுதி, ள் சந்தி, உம் எச்சவிகுதி. இது நிகழ்காலத்தினை மேல்நின்றது. உம்மை முற்று. (௯0)

91. வன்கண்மை - கொடுங்குணமை, இல்லாதான் - இல்லாதவனது; செல்வத்து இனை - செல்வத்தைப் பார்க்கிலும், மறைகியோன் - கொடுக்குந் தன்மையையுடையவனது, நல்குரவு ஏ - வறுமையே, நனிநல்ல - மிகவுநல்லன (ஏனெனில்) உருகிஇலன் என்று (அவ்வுலகமே யான் போன) (பயிரசனிடத்து) கருணையில்லாதவனென்று, அன்பு இலன் என்று - அன்பில்லாதவனென்று, கண்ணோட்டமிலன் என்று - தாட்சிணியமில்லாதவனென்று, பலர்நல - பலராலும், கொள்ளே - வாளா, இகழப்படான - நிந்திக்கப்படான.

பலராலும் இகழப்படாமையால் ஈகையில்லார் செல்வத்தைப் பார்க்கிலும் ஈகையுடையோர் வறுமை நல்லது என்பது கருத்து. நல்குரவு எ. நனிநல்ல ப. இனஉருபு உயர்வுசிறப்பில் வந்த எல்லைப் பொருட்டு. கண்ணறைபன கண்ணோட்டம் அறுதல் உடையவன் - கண்ணறு பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ தொழிற்பெயர் விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, யகரமெய்சந்தி, அன் ஆண்பால் விகுதி. ஏ பிரிநிலை.

95. பகைஇன்று - பகையில்லாமல், பல்லார் - பலருடைய, பழி - பழிச்சொல்லை, எடுத்துஓதி - எடுத்துச் சொல்லி, நகைஒன்றுஏ - (பிறர்) நகைத்தலொன்றையே, நன்பயன்ஆ - (தனக்கு) நல்லபயனாக, கொள்வான் - கொள்ளுகிறவன், பயம் இன்று (தனக்கு) பயனில்லை (ஆயினும்) மெய்விதிர்ப்ப (பிறரது) உடம்பினடுக்கத்தை, காண்பான் - காணுதலை (தனக்குப்பயனாக) கொடிறு (அவர்களது) கபோலத்தை, உடைத்து - தகர்த்து, கொல்வான்போல் - கொல்வானைப் போல, கைவிதிர்ப்ப - கைநடுங்க, அஞ்சப்படும் (பிறரால்) அஞ்சப்படுவான்.

பிறர் நகைத்தலொன்றையே பயனாகக்கொண்டு தன்னோடு பழகினோர் பழியைக் கூறுவோனை யஞ்சி யொழிய வேண்டும் என்பது கருத்து. கொள்வான் எ. அஞ்சப்படும ப. மெய்விதிர்ப்பு தொழிற்பண்புத்தற் கிழமைப் பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். விதிர்ப்பு தொழிற்பெயர் விதிர் பகுதி, ப் சந்தி, பு விகுதி, காண்பான் தொழிற்பெயர் - காண் பகுதி, பான் தொழிற்பெயர்விகுதி. விதிர்த்து இறந்தகால வினையெச்சம். ஏபிரிநிலை. (௯௫)

96. தெய்வம் உளது என்பார் - தெய்வம் உண்டென்று சொல்வோர், தீய - தீயகாரியங்களை, செயபுகின் - செய்யத் தொடங்கில், தெய்வம் ஏ - அத்தெய்வமே, கண் இன்று - தாட்சிணிய மில்லாமல், நின்று (அவர்முன்) நின்று, ஒறுக்கும் - தண்டிக்கும், தெய்வம் இலது - தெய்வம்இல்லை, என்பார்க்கு என்றுசொல்வார்க்கு, இல்லை (அத்தெய்வம் தண்டித்தல்) இல்லை, தம (தந்தைமார்) தம்முடைய, இன மதல்வர்க்கு - இனிய புதல்வர்களுக்கு, அன்று ஏ - அல்லவா, பகைால் உட

(ஒப்புதல்வர் நன்னெறியில்நின்று) தவறுந்தோறும். பயன் - பயன்தருஞ் சொற்களை, சொல்வார் - சொல்லுவார்.

தெய்வம் உண்டு என்று கருதுவோர் தீயகாரியங்களைச் செய்தால் அத்தெய்வம் அவர்களைத் தண்டிக்கும், இல்லை யென்று கருதுவோர்க்கு அத்தண்டித்தல் இல்லை யென்பது கருத்து. தெய்வம் எ. ஒறுக்கும். இல்லை ப. ஒறுக்கும் எதிர்காலவினைமுற்று ஒறு பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி. உம் விகுதி. ஏ இரண்டனுள் முன்னது பிரிநிலை. பின்னது வினா. (கூசு)

97. இன்புஉற - பரிசவின்பமிக, நாநக்கி - நாவினால்நக்கி கொல்லும் (பின்பு) கொல்லும், கவயமாபோல் - சாட்டுப் பசுவைப்போல, தீயசெயல் - கெட்டசெயலை, செய்வார் - செய்வோர்க்கு, ஆக்கம் பெருகினும் - செல்வம் பெருகினாலும், தீயன - அத்தீயசெயல்களால்வருஞ்செல்வங்கள், தீயனவே - (முன்பு இன்பத்தைத்தரினும் பின்பு) தீமையைத் தருவனவேயல்லாமல், வேறுஅல்ல - நன்மையைத் தருவனவல்ல (ஏனெனில்) தீயன - கெட்டபொருள்கள், நல்லன - நல்லபொருள்கள், ஆகாஆம்(ஒருபோதும) ஆகமாட்டாவாம்.

தீய தொழில்களால் வரும் பொருள்கள் கெடுதியைய விளைக்கும் என்பது கருத்து. தீயன எ. தீயன ப. பெருகின் என்னும் எதிர்கால வினையெச்சத்துக்கு ஆக்கம் வினைமுதலாகின்றது. நாநக்கி கருவிப்பொருளில்வந்த மூன்றும் வேற்றுமைத தொகைநிலைத்தொடர். இன்புற இடைப்பிறவரல். உம்மை இழிவுசிறப்பு. ஏ பிரிநிலை. (கூஎ)

98. வஞ்சித்து (தவவேடத்தால் பிறரை) வஞ்சனைசெய்து, ஒழுகும் (அவ்வேடத்தில்தமது தீயொழுக்கத்தை மறைத்

து) நடக்கும், மதியிலிகாள் - அறிவில்லாதவர்களே, யாவர் ஐ உம் - எல்லோரையும், வஞ்சித்தோம் என்று - வஞ்சித்து நடக்கினோம் என்று, மகிழன்மின்-மகிழ்ச்சியடைதலொழியுங்கள், வஞ்சித்த (நீங்கள்) வஞ்சித்த செயல்களை, எங்குமஉளன் ஒருவன் - எவ்விடத்தும் நிறைந்துள்ள வொருவன், காணும் என்று - காண்பான் என்று, அஞ்சி - பயந்து, அங்கம் குலைவது - உடம்பு பதறுவது, அறிவு-அறிவாம்.

தவசிகள் தமது தீயவொழுக்கத்தைத் தவவேடத்தால் மறைத்துப் பிறரைவஞ்சிப்பதுபெரும்பாவம்என்றுதாம்அஞ்சவேண்டும் என்பது கருத்து. அங்கங்குலைவது எ. அறிவு ப. மதியிலிகள் மதியிலிகாள் விளியுருபு. மயலிகள் என்பதற்குப் பகுபதவுறுப்புக் கொண்டதுபோலக் கொள்க. மகிழன்மின்எதிர்மறை ஏவற்பன்மை வினைமுற்று மகிழ்பகுதி. அல் எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி வஞ்சித்து பெயரடியாகப்பிறந்த இறந்தகால வினையெச்சம் - வஞ்சிபகுதி. இது வஞ்சம் என்னும் பெயரடியாகப் பிறந்தது. உம்மை இரண்டும் முற்றுப்பொருளன. சொல் அசை. (கஅ)

99. மறைவழி - இரகசியத்தில் (செய்த) பட்ட (இழிதொழிலால்) வந்த, பழி மொழி-பழிச்சொற்கள், தெய்வம் பறை அறைந்தால் - தெய்வம்பறைசாற்றித் தெரிவித்தால், ஆங்கு - போல, ஓடி (எங்கும்) சென்று, பரக்கும் - பரவும், புறம்பொதிந்து - புறத்தில் மறைத்து, மூடின் உம் - மூடினும், கழிமுடை-மிகுந்த தீ நாற்றத்தையுடைய, புன்புலால் நாறறம்-இழிவாகிய புலால் நாற்றம ஆனது, சேயார் முகத்து - தூரத்திலுள்ளவர் முகத்தில், சென்று - போய், தைக்கும் - பாயும்.

சென்று உதைக்கும் எனப்பிரித்துச் சென்று தாக்கும் எனினும் அமையும். தவவேடத்தில்மறைந்து தீமைசெய்வோனது முழுமுதலிய குறிகளால் அவன் தீமைவெளிப்படும்என்பதுகருத்து. பழி எ. பரச்சும் ப. அறைந்தால் ஆங்கு அறைந்தாங்கு வினையெச்சத்தின ஈறு தொகுத்தல். பறை அடித்தல் அது வாச்சியத்தின்மேல் நிற்றலால் தொழிலாகுபெயர். பொதிந்து இறந்தகால வினையெச்சம் பொதிபகுதி. உம்மை இழிவு சிறப்பு. (௯௯)

---

முனைப்பாடியார்

இயற்றிய

அறநெறிச்சாரம்.

100. காலை (பொருள்கிடைத்த) பொழுதே, செய்வோம் என்று - செய்வாம் என்று, அறத்தை - தருமத்தை, கடைப்பிடித்து-மறவாமற் கைக்கொண்டு, சால-மிகவும், செய்வார் ஏ - செய்கின்றவரே, தலைப்படுவார் - (அறத்தாலாகிய பயனை) அடைவார், மாலை - இரவில், கிடந்தான் - படுத்துறங்கினவன், எழுதல்அரிது (உயிரோடு) மீட்டும்எழுதல் அரியது (ஆதலால்) அறம்-அத்தருமத்தை, காலை (பொருள்கிடைத்த) பொழுதே, செய்யாதஆறு-செய்யாதவகை, என-யாது.

பொருள் கிடைத்தபொழுதே அறஞ் செய்யவேண்டும் என்பது கருத்து. செய்வார் எ. தலைப்படுவார் ப. கடைப்பிடித்து இறந்தகால வினையெச்சம் கடைப்பிடி பகுதி. தலைப்படுவார் எதிர்காலவினைமுற்று-தலைப்படு பகுதி. மற்று ஆல் இரண்டும் அசைகள். ஏ பிரிநிலை. (௧00)

**101.** சென்ற நாள் எல்லாம் (வாழ்நாளில்) கழிந்த நாள்களையெல்லாம், சிறுவிரல வைத்து - சிறியவிரலைக்குறியாகக்கொண்டு, எண்ணல் ஆம் - வரையறுத்தல் கூடும், நின்ற நாள் (கழியாது) நின்றநாளை, யார்க்கும் - எவர்க்கும், உணர்வு அரிது என்றும் - அறிதல் முடியாது என்று கருதியும், ஒருவன் நன்றமபுரியாத - ஒருவன் அறத்தைச்செய்யாமல், நாள் உலப்ப - வாழ்நாள் பயன்படா தொழிய, விட்டிருக்கும் (அறத்தை) கைவிட்டிருக்கும். புன்மை - அறியாமை பரம்பெரிது - மிகவும்பெரியது.

வாழ்நாள் வீணாகபடாமல் தருமத்தைச் செய்யவேண்டும் என்பது கருத்து. புன்மை எ. பரம் பெரிது ப. என்று இடைச் சொல்லடியாகப்பிறந்த இறந்தகால வினையெச்சம் - என் இடைச்சொற்பகுதி, ற் இடைநிலை, உ எச்சவிகுதி. இது னிறுதியில் இழிவு சிறப்பும்மை தொகுத்தல். உலப்ப நிகழ் கால வினையெச்சம் உல பகுதி, ப் சந்தி, ப விரித்தல்விகாரம். அ எச்சவிகுதி. உம்மைமுற்று. (௧௦௪)

**102.** பலரும் வருந்தாமல் - பலரும்மகிழ, பட்டவகை ஆல் (நூலில்) கூறிய வகையால், கட்டு உடைத்து ஆக (தனக்கு) உறுதியுடையதாக, கருதிட - எண்ணி முயன்ற, நல அறம் - நல்லதருமத்தை, முட்டு உடைத்து ஆக (தனக்கு ஒரு) தடை பாடுடையதாக, இடை - நடுவில, தவிர்ந்து வீழ்தல் இல் - கைவிடுதலைப் பார்க்கிலும், நட்டு - செய்யை நட்டு, அருள் ஆதல் ஏ - அறுத்து அதன்பயனை அனுபவியான் ஆகுதலே, நன்று - நல்லது.

தனக்கு ஓர் குறைவந்தாலும் எண்ணிய தருமத்தை விடாது முயலவேண்டும் என்பது கருத்து. ஆல் எ. நன்று ப.

பின்னை - பின்பு, தான் எய்தாத - தான் அடையாத, பயன இல்லை- பயன்வேறில்லை (எல்லாப்பயனையும் அடைவன் என்றபடி) தன்னைகுடிகெடுக்கும் - தன்னைக்குடியோடுகெடுக்கா நின்ற, நெஞ்சிறகு-மனத்திற்கு, குற்றேவல்செய்யின்-சிறியஏவலைசெய்து நடந்தால் (அச்செயகை) பிடி படுக்கப்பட்ட- பெட்டையானையால் குழியில் வீழ்த்தப்பட்ட, களிறு-ஆண் யானையை (ஒக்கும்)

ஏான ஆனமா. அடங்கல் சீவபோதம் அடங்கல். குடி கெடுத்தல் தன்பயனிழககச் செய்தல். குற்றேவல் மனஞ் சென்றவழித்தான் செல்லுதல். பிடிபடுககப் பட்டகளிறு தன்னியல்பு கெடுதல்போல மனஞ்சென்ற வழிச்சென்ற ஆன்மா ன்னியல்பு கெடுதல். தன்மனச்சாட்சியாகத்தானடங்கினுல எல்லாபபயனையும் அடைவன என்பதும், மனஞ் சென்ற வழிச்செல்வானுயின் தனபயனை யிழப்பன் என்பதும் இதனது கருத்து. பயன், செய்யின் என்னும் எச்சத்தினின்று பிரிந்த செய்கை எ. இல்லை, ஒக்கும் ப. ஐ உருபுமயக்கம். குடிகெடிக்கும் உடனிகழ்ச்சிப் பொருளில்வந்த மூன்றுமவேற்றுமைத் தொகைநிலைத்தொடர். குற்றேவல் குறுமைஈறுகெட்டுத் தன்னெற் றிரட்டித்து ஈற்றுயிர் கெட்டு வருமொழிமுதல் உயிர் ஏறநின்றது. (௧0௪)

105. நல்நெஞ்சே - நல்லமனமே, நின்னை, உன்னை, அற-மிகவும், பெறுகிற்றிலேன் (எனக்கு ஒர் துணையாக) பெற்றிலேன், பின்னை - பினபு (நின்னையொழிய என்றபடி) யான் யாரை பெறுகிற்பேன் - நான் எவரை (துணையாக) பெறுவேன், நின்னை - உன்னை, அற-மிகவும், பெறுகிற்பேன் ஏல்-பெறுவேனுனல், ஈண்டு - இப்பிறப்பிலேயே, துறக்கம்-

மோட்சவுலகத்தை, திறப்பது - திறக்கும், ஓர் தாழ்பெற்றேன் - ஒரு திறவுகோல பெற்றேன.

பெறுகிற்றிலேன், தாழ்எனப்பாடம். மனம் தன்வசப் பட்டால் மோட்சவுலகம் செல்லுதல் எளிது என்பது கருத்து. யான் எ. பெற்றேன் ப. பெறுகிற்றிலேன் எதிர்மறை வினைமுற்று. பெறுகிற்பேன் உடன்பாட்டு வினைமுற்று. பெறு பகுதி, கில் ஆற்றலுணர்த்தும விகுதி, அனைத்தும ஒரு பகுதி, து சாரியை, லகரமுந தகரமுந திரிதலும் உகரங்கெடும சந்தி, இல் எதிர்மறைவிகுதி, அனைத்துமொருபகுதி, ஏன் தன்மை யொருமை விகுதி. கில்விகுதி எதிர்மறையில வரும்பொழுது கிறு எனச்சாரியைபெற்று நிற்கும "உண்கிற்றிலேன்" என்பதனாற்காண்க. (௧0௫)

106. ஊர் உள் இருந்து உம் - ஊரினுள் குடியிருந்தும், தம் உள்ளம் - தமது மனத்தை, அற - மிகவும, பெற்றார் ஏல- (துணையாக) பெற்றாராயின், கள் அவிழ - தேனொழுகாநின்ற சோலைஆம் - சோலைநிறைந்த, காடுஉள்ளார் - காட்டினுள ளிருந்தவராவா, காடு உள் உம் - காட்டினுள் ளிருந்தும், உள்ளம - (தமது) மனத்தை, அற - மிகவும், பெறுகல்லார் ஏல் - (துணையாக)பெறாராகுனல், நாடுஉள்உம் - நாட்டினுள்ளும, ஊர்நடுஉள் - ஊரினடுவில், நண்ணியார் - குடியிருந்த வராவர்.

எங்கிருப்பினும் தமது மனம் தம்வசப்பட்ட பெறுவோரே துறவறத்தினர் என்பது கருத்து. பெற்றார், பெறுகல்லார எ. காட்டுளார், நண்ணியார் ப. பெறுகல்லார் எதிர்மறை வினைமுற்று பெறு பகுதி கு அல் இரண்டுஞ் சாரியைகள்,

உகரக்கேடும், லகரத்தோற்றமும் சந்தி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும்ஒருபகுதி. ஆர் பலர்பால் விகுதி, விகுதியின் ஆ முதற்குறை. நடுவூருளார் என்பதில் விகுதியைப் பிரித்து நண்ணி என்பதனோடு கூட்டுக. (௧௦௬)

107. காய்தல் உவத்தல் - வெறுப்பு விருப்புகளை, அகற்றி - ஒழித்து, ஒருபொருள்கண் - ஒருபொருளில் (உள்ள குணங் குற்றங்களை) ஆய்தல் - ஆராய்தல், அறிவுடையார்- அறிவுடையவரது, கண்ணது - இடத்திலுள்ளது, காய்வது அன்கண் - வெறுக்கும் பொருளிடத்து, உற்ற குண உம்- பொருந்திய குணமும், தோன்றாது ஆகும்-தோன்றாதுவிடும் உவப்பது அன்கண்-விரும்பும பொருளிடத்து, குற்றம் உம்- (உள்ள) குற்றமும், தோன்றாமல் கெடும் - தோன்றாமற் போம்.

ஒன்றைக்கொள்வோர் விருப்பு வெறுப்பு இல்லாமல் அதன் குணங்குற்றங்களை யாராய்ந்து கொள்ள வேண்டும் என்பது கருத்து. ஆய்தல் எ. அறிவுடையார் கண்ணது ப. காய்வது, உவப்பது அஃறிணை யொன்றன்பாற் படர்க்கை யெதிர்கால வினையாலணையும் பெயர்கள். உவ பகுதி. கண்ணது இடத்தினடியாகப் பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. கண் பகுதி, ண் சந்தி, அ சாரியை, து விகுதி. குணம் என்பதின் இறுதியில் உயர்வுசிறப்பும்மை தொகுத்தல். உம்மை இழிவு சிறப்பு. (௧௦௭)

108. விருந்து புறந்தரான்-விருந்தினரையும் பாதுகாவாமல், வேளாண்மை செய்யான் (பிறர்க்கு) உபகாரத்தையும் செய்யாமல், பெருந்தக்கவரைஉம்-பெரியோரையும், பேணான்-உபசரியாமல், பிரிந்துபோய் (மனைவியினது) பிரிந்து

போய், கல்லான் (நூல்களையும்) கல்லாமல், கடியினை (ஒரு
வன்) கொடுந்தொழிலை, மேற்கொண்டு - கைக்கொண்டு, ஒழு
கும் ஏல் - நடப்பானானால், இல்வாழ்க்கை என்பது (அவன)
மனையொடுகூடி வாழும் இல்லறம் அனைத்தும், இருள் (ஓர்) இரு
ளாகும்.

இல்வாழ்க்கைக்குரிய நற்செய்கைகளை ஒருவன் கைக்
கொள்ளவேண்டும் என்பதுகருத்து. இல்வாழ்க்கை எ. இரு
ள ப. என்பது சொல்லுருபு. விருந்தே, வேளாண்மை என்ப
வற்றி னிறுதிக்கண் இறந்தது தழீஇய எச்சவும்மை தொகுத்
தல். நூல் இசையெச்சம். புறந்தாரான், செய்யான், பேணான்,
கல்லான் இவ்வெதிர்மறை வினைமுற்றுகள் எச்சமாய் நின்
றன. விருந்து புதுமை - இதுபண்பாகுபெயராய் விருந்தினை
மேல் நின்றது. (108)

109. அட்டு உண்டு - சமைத்து உண்டு, வாழ்வார்க்கு -
வாழும் இல்லறத்தினர்களே, எஞ்ஞான்றும் - எப்பொழு
தும், அட்டு உண்ணா - சமைத்துண்ணாத, மாட்சி உடைய
வர் - தன்மையை யுடையவர், அதிதிகள் - விருந்தினராவார்,
அட்டு உண்டு - சமைத்து உண்டு, வாழ்வார்க்கு - வாழும்இல்
வாழ்க்கையோர்க்கு, வாழ்வார் - அவ்வில்வாழ்க்கையோரே,
அதிதிகள் என்று உரைத்தல் - விருந்தினர் என்று சொல்லு
தல், வீழ்வார்க்கு (காலிடறி) விழுவோர்க்கு, வீழ்வார் (அவ்
வாறு) விழுவோர், துணை - துணை (என்பதையொக்கும்.)

அதிதிகள் ஒருநாளும் நிலை யில்லாது சஞ்சரிப்பவர்-
இல்வாழ்க்கையோர்அதிதிகளை யுபசரியாது தம்போல்வாரை
யுபசரித்தல் கூடாது என்பதுகருத்து. அட்டுண்ணா மாட்சி
யுடையவர், உரைத்தல் எ. அதிதிகள், ஒக்கும் ப. அட்டுஇறந்

ஃகால வினையெச்சம் அடுபகுதி, முதனிலை யெழுத்தாயத தோன்றிநின்ற டகரம் இடைநிலை, உகரக்கேடுசந்தி, உ எச்சவிகுதி. உண்ணு ஈறுதொக்க எதிர்மறைப்பெயரெச்சம். ()

110. மருவிய (தன்னினின்று) பிரியாத, 'காதல் - விருப்பத்தையுடைய.மனையாள் உம்-மனைவியும், தான உம்-தானும், (இருவர் உம்' ஆகிய) இருவர்களும, பூண்டு - மேற்கொண்டு, ஈர்ப்பின் அல்லால் - இழுத்தால (செல்லுமே) அல்லாமல், ஒருவர் ஆல் (இவ்விருவருள்) ஒருவரால், இல்வாழ்க்கை எனறும் - இல்லறம என்னும், இயல்பு உடைய - தனமையை யுடைய, வானசகடம் - பெரிய பண்டியானது, தெறறிற்று நின்று - தடைபட்டுநின்று - செல்லாது - செல்லமாட்டாது.

இருவரும் மனமொத்து நடத்திலால் இல்லறம் நடக்கும் என்பதுகருத்து. சகடம் எ. செல்லாது ப. பூண்டு எனனும இறந்தகாலவினையெச்சம் ஈர்ப்பின் எனனும எதிர்காலவினையெச்சத்தையும் அவ்வெச்சம் அல்லாலென்னும எதிமறைக குறிப்பு வினையெச்சத்தையும் அவ்வெச்சம் செல்லாது என்னும எதிர்மறைவினைமுறறையுங்கொண்டன. பூண்பகுதி, ட் இடைநிலை, உ எச்சவிகுதி. ஈர் பகுதி, ப் சந்தி, ப விரித்தல் விகாரம, இன எச்சவிகுதி. தெறறிற்றுஇறநதகாலவினைமுற்று தெற்று பகுதி, இன் இறநதகாலவிடைநிலை, து ஒன்றனபால் விகுதி, உகரக்கேடும் னகரமும் தகரமும் றகரமாகத் திரிதலும் சந்தி. இம்முறறு எசசமாய் நின்றது. (கக௦)

111. ஆறற-மிகவும், மறுஅறு - குறறமறற, சீலம் உம்-நல்லொழுக்கத்தையும், நோன்புஉம் - விரதத்தையும், இலலாளை-இலலாதவனை, உறுபயன (அவற்றாலாய)மிக்கபயனை, வேண்டி-விரும்பி, கொளல் (அவனை ஒருவன் நட்பு) கொள்

ருதல், நாற்றம் ஒன்று இல்லாத-வாசனை சிறிதுமில்லாத,பூ ஒடுசாந்தினை - மலரையும் சந்தனத்தையும், நாற்றம்தான்-வாசனையை, வேண்டியது போலும் (ஒருவன்) விரும்பிக் கொண்டதையொக்கும்.

சீலமுதலியநற்குணங்களில்லாரையவைவேண்டிச்சிநேகங்கொள்ளல் அறியாமை என்பதுகருத்து. கொளல் எ. போலும் ப. வேண்டியது செ. இல்லார்செயப்படுபொருள குன்றுத எதிர்மறைக்குறிப்பு வினையாலணையும் பெயர். ஒடு உருபு செயப்படு பொருளில்வந்தது. உம்மை எண்ணுப் பொருட்டு. (கசக)

**112.** மெய்ம்மை ஏ - உண்மையாகவே, இம்மை-இப்பிறப்பில், அடக்கத்தை (யாவர்க்கும்) பணிந்து நடத்தலை, செய்து செய்வித்து, புகழ்ஆக்கி - கீர்த்தியைப் பெருகப்பண்ணி, உம்மை - மறுமையில், உயர்கதிக்கு-சிறந்தமோட்சத்தில், உய்த்தலால், செலுத்துதலால், அறம்-தருமநூலிலுள்ள, பட்டாங்கு-உண்மையை (உணர்ந்து) உணர்க்கும் (பிறர்க்குப்பயனபட) சொல்லும், பண்பு உடையாளர் ஏ-நற்குண முடையவரே, நட்டார்எனப்படுவார் - நட்பினரென்று சொல்லப்படுவார்.

நற்குணமுடையார சிநேகம் இம்மையிற்புகழையும்மறுமையில் முத்தியையும் கொடுக்கும் என்பது கருத்து. பண்புடையாளர் எ. நட்டார் எனப்படுவார் ப. கு உருபு மயக்கம். உய்த்தல் பிறவினைத்தொழிற்பெயர் உய் பகுதி, த் சந்தி, தல் விகுதி. உய் என்னும்பகுதி தன்வினையில் சந்திபெறாது உய்தல் எனவரும். ஆல் உருபு ஏதுப்பொருட்டு. ஏ இரண்டனுள் முன்னது தேற்றம். பின்னது பிரிநிலை. (கசஉ)

**113.** வைகல் உம் - எப்பொழுதும், நீருள் கிடப்பின் உம் - நீரினுள் முழுகிக் கிடந்தாலும், கல்லிற்கு - கல்லினுக்கு (கடினத் தன்மையே யல்லாமல்) மெல்லென்றல் - இளகிய தன்மையையடைதல், சால - மிகவும், அரிது ஆகும் - இல்லையாம், அஃது ஏபோல - அக்கல்லேபோல, வைகல் உம் - எப்பொழுதும், நல் அறம் - நல்லதருமநூலை, கேட்பின் உம் - கேட்டாலும், கீழ்கட்கு - கீழ்மக்களுக்கு, நெஞ்சு - மனம் (இளகுந்தன்மையை யடையாமல்) கல்லின் உம் - கல்லைப் பார்க்கிலும், வல்லென்றும் - கடினத் தன்மையையுடையும்.

எப்பொழுதும் கீழ்மக்கள் அறநூலைக்கேட்டுப் பழகினும் அவர் மனம் திருந்தாது என்பது கருத்து. நெஞ்சு எ. வல்லென்னும் ப. மெல்லென்றல் பண்பு குறித்த இடைச் சொல்லடியாகப் பிறந்த தொழிற்பெயர். மெல்லென்பகுதி, தல்விகுதி, தகரம் றகரமாகத் திரிதல் சந்தி. வல்லென்னும் இடைச் சொல்லடியாகப் பிறந்த செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று. (கக௩)

**114.** நீர் எல்லாம் - நீர்வகையெல்லாம், பாம்பு உண்ட - பாம்பு பருகுதலால், நஞ்சு ஆம் - நஞ்சாகும்; பசு உண்ட - பசுவானது பருகுதலால், தேம் படு - இனிமை பொருந்திய, தெள் நீர் - அந்தத் தெளியநீர், அமுதம் ஆம் - அமுதமாகும், அதுபோல - அதுபோல, ஞானம் - ஞான நூலானது, உயர்ந்தோர்க்கு - மேலோரிடத்து, ஓம்பல்கு - பாதுகாத்தலால், ஒளி ஆம் - விளக்கமாம், கடையாயார் மாடு - கீழோரிடத்தில், களி ஆம் (கெடுதியை விளைத்தற்கு) மயக்கமாம்.

ஞானநூல் உயர்ந்தவர்க்கு நன்மையை விளைப்பதே யல்லாமல் தாழ்ந்தவர்க்கு நன்மையை விளைக்காது என்பதாக

ருத்து. ஞானம் எ. ஒளியாம், களியாம் ப. உண்டகாரணப் பொருளில்வந்த இறந்தகாலப் பெயரொச்சம், ஞானம் தானமாகிய நூல்மேல் நிற்றலால் தானியாகுபெயர். கு உருபு மயக்கம். தெண்ணீர்முதலில்அகரச்சுட்டுத்தொகுத்தல். மாடு வேற்றுமை யுருபேற்றலால் தனைறெறிரட்டியது. (ககச)

115. நல்லாய் - அழகுள்ளவளே, கல்லாத ஒருவனை- (நூல்களை) கற்காத ஒருவனுக்கு, காரணம் காட்டின் உம் (தருமபபயனை) காரணங்காட்டி வற்புறுத்தினாலும், அறனை உணாதல்-அதசருமப்பயனையறிதல், ஒன்றுஉம் இல்லை - சிறிதும் இல்லை, நறு-நல்லவாசனையையுடைய, நெய்நிறை-நெய நிறைந்த, புழுக்கல்-சோற்றில், உய்ப்பினஉம்-அழுக்கினாலும், மூழை-அகப்பையானது, சுவை (அச்சோற்றின்)மதுரத்தை, உணரும் ஆறு-அறியும்வகையை, பெறும் ஓ-பெறுமா (பெறாது என்றபடி)

கற்காதவனுக்கு அறநூற்பயனைக் காரணங்காட்டி வற்புறுதறிச் சொன்னாலும் அவன்சிறிதுந் தெளியான் என்பது கருத்து. உணர்தல் எ. இல்லை ப. புழுக்கல் தொழிற்பெயர் புழுங்கு பகுதி, மெல்லெழுத்து வல்லெழுத்தாதல் விகாரம், உகரக்கேடு சந்தி, அல்விகுதி, இதுதொழிலாகுபெயராயுணவினமேல் நின்றது. ஐ உருபுமயக்கம். ஓ எதிர்மறை. ஒன்று என்பதன் இறுதியில் நின்ற உம்மை இழிவுசிறப்பு. ()

116. கட்டளை - செய்யுங்கருவி, கோடி திரியில் - மாறுபட்டு (உருவு) திரிந்தால், கருதிய-ஒருவன் (செயய)நினைத்த, இட்டிகைஉம் - செங்கல்லும், சோடும் (உருவில்) மாறுபடும், அதுபோலும் - அச்செய்கையைப்போலும், ஒட்டிய - நீங்காத, காட்சி திரியின் - அறிவுவேறுபட்டால், அறம் திரியும

என்று (ஒருவன் செய்யக்கருதிய) தருமமும்வேறுபடும்என்று, மாட்சியில் மிக்கவர் தாம் - அறிவிற் பெரியோர், உரைப்பர் - சொல்லுவார்.

அறஞ் செய்யக் கருதினவன் அறிவு வேறுபட்டால் அவன்செய்யும் அறமும் வேறுபடும் என்பது கருத்து. மாட்சியின் மிக்கவர் எ. உரைப்பர் ப. கோடி இறந்தகால வினையெச்சம்-கோடுபகுதி. கோடும்செய்யும்என்னும்வினைமுற்று-ஒட்டிய இறந்தகாலப்பெயரொச்சம் ஒட்டு பகுதி. பயனும் அன்றிஎன நிற்றலால் உம்மை உயர்வுசிறப்பு. அறம் என்பதனிறுதியில் இறந்ததுதழுவிய எச்சவும்மை தொகுத்தல். ()

117. கெடுக்கப்படுவது (ஒருவனால்)நீக்கப்படுஞ்செயல், தீகருமம் ஏ - கெட்டசெயலே, நாள் உம் - எப்பொழுதும், கொடுக்கப்படுவது (ஒருவனால்) கொடுக்கப்படுஞ் செயல், அருள் ஏ - கொடையே, அடுத்து அடுத்து - இடைவிடாமல், உண்ணப்படுவது (ஒருவனால்) உண்ணப்படும் உணவு, நல்ஞானம் ஏ - நல்லஅறிவுநூற்பயனே, எ பொழுதும் - எக்காலத்திலும், எண்ணப்படுவது (ஒருவனால்) நினைக்கப்படும் பொருள், வீடு ஏ - மோட்சமே.

கெடுக்கப்படுவது, கொடுக்கப்படுவது, உண்ணப்படுவது, எண்ணப்படுவது எ. தீக்கருமம், அருள், ஞானம், வீடு ப. கெடுக்கப்படுவது எதிர்காலச்செயப்பாட்டு வினையாலணையும் பெயர் கெடுக்கஎன்னும் தாதொழிற்கு ஒருவனால் என்னும் மூன்றும் வேற்றுமை வினைமுதலும், படுவது என்னும் தம்மினுகிய தொழிற்குச் செயப்படுபொருளில் வந்த தீக்கருமம் வினைமுதலாகவுங் கொள்க.மற்றையவற்றிற்குமஇஃதொக்கும். ஏ பிரிநிலை. உம்மைமுற்று. (கக௭)

118. திரை அவித்து (கடலில்நீராடச்சென்றவர்) வரும் அலைகளை யொழித்து, நீர் ஆடல் - நீராடலா மென்றிருத்தல், ஆகா - முடியா (அதுபோல) உரைப்பார் (ஒன்றுபேசுவோர்) எதிர்பேசுவோருடைய, உரை அவித்து-சொல்லையொழித்து, சொல் - பேசுதல், ஒன்றுஉம் இல்லை - சிறிதும் இல்லை, அரைசர் ஆய் (அறஞ்செய்வோர்) அரசச்செல்வம் உடையவரான பின்பு, செய்தும் (நாம்அறத்தை) செய்வோம், என்னின்- என்றுகருதியிருந்தால், ஆகாது-செய்தல்கூடாது, உளவரை ஆல் (பொருள்) இருக்கிற அளவில், செய்தவர்க்கு ஏ (அறம) செய்தவர்களுக்கே, திரு ஆதும் - மோட்சச் செல்வம் கை கூடும்.

பெருஞ் செல்வம் உடையவரானபின்பு தருமத்தைச் செய்யலாமென்று காலம் போக்காது உள்ளது கொண்டு தருமஞ்செய்யவேண்டும் என்பது கருத்து. சொல், செய் தல், திரு எ. இல்லை, கூடாது, ஆகும் ப. அவித்து என்னும் இறந்தகால வினையெச்சம் ஆடல் என்னும் தொழிற்பெயரை யும், பின்னுள்ள அவ்வெச்சம் சொல் என்னும் முதனிலைத் தொழிற்பெயரையும் கொண்டன. அவி பகும். ஆம், உம் இரண்டும் அசைநிலைகள். அரசர் அரைசர்இடைநிலைபோலி ஒன்று என்பதன இறுதியில்நின்ற உம்மை இழிவுசிறப்பு. ()

119. உப்புகுவடுஇன்மிசை-உப்புமலையின்மேல், இருந்து உண்ணின் உம் (ஒருவன்) இருந்து உண்டாலும், இட்டு (அவ் வுணவில் அவ்வுப்பை) இட்டு, உண்ணாத கால் - உண்ணாத காலத்தில், அதுகூராது - அவ்வுணவு மதுரநதராது. தொக்க (உறுப்புகளில்) துறைவின்றி நிறைந்த, உடம்பு உம் பொருள்

உம் - உடம்பையும் பொருளையும், உடையான் - உடையவன், ஓர் நன்மைதொடங்காத கால்-ஒரு அறத்தைச செய்யாத காலத்தில், பயன் என்ன (அவற்ருல்) பிரயோசனம் யாது.

பழுதில்லாத உடம்பையும் பொருளையு முடையவன் அவறருலுள்ள பயனை யவையுள்ள பொழுதே பெறவேண்டும் என்பது கருத்து. பயன் எ. என்ன ப. உண்ணு, தொடங்கா ஈறுதொக்க எதிர்மறைப் பெயரொச்சங்கள். குவடு உருபேற்று நின்றதால் தன்னொற்றிரட்டியது. (கககூ)

**120.** இன்சொல் ஏ - இனிய சொல்லே, விளைநிலன் ஆக - சழனியாச, ஈதல் - கொடுத்தலே, வித்துஆக - விதையாக (கொண்டு) வன்சொல் - கடுஞ்சொல்லாகிய, களைகட்டு-களையைக் களைந்து, வாய்மை எரு - உண்மையாகிய எருவை, அட்டி - சேர்த்து, அன்பு நீர்பாய்ச்சி - அன்பாகிய நீரைப பாய்ச்சி, அறம் கதிர் - தருமமாகிய கதிர், ஈன-வெளிப்பட, ஓர் பைங்கூழ் (இவ்வகையான) ஒப்பில்லாத பசியபயிரை, சிறுகாலை (உனக்குள்ள) சில வாழ்நாளிலேயே, செய் (நீ) பயிரிடுவாய்.

ஒருவன் கடுஞ்சொல்லை யொழித்து இன்சொல் முதலியவறறைக் கைக்கொள்ளவேண்டும் என்பது கருத்து. நீதோ - செய் ப. கட்டு இறந்தகால வினையெச்சம் கள்பகுதி, த இடைநிலை, ளகரமும் தகரமும் டகரமாகத்திரிதல் சந்தி, உ எச்சவிகுதி. அட்டி முதனிலை திரியாதுவந்த பிறவினை வினையெச்சம் அடுபகுதி, முதனிலை யெழுத்தாய்த்தோன்றி நின்ற டகரம் விரித்தல, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி

பாய்ச்சி இறந்தகாலப்பிறவினை வினையெச்சம்பாய்ச்சுபகுதி. இன சொல் என் பதன் இறுதியில் பிரிநிலை ஏ தொகுத்தல்.()

**121.** குற்றத்தை - குற்றமுள்ள செயலை, நன்று என்று - நன்மையுள்ள செயலென்று, கொண்டு - கைக்கொண்டு, குணம் இன்றி - நற்குணமில்லாமல், செற்றம்முதலாக - கோப முதலாய, உடையவரை (தீக்குணங்களை) உடையவர்களை, தெற்ற - தெளிவுபெற, அறிந்தார் என்று - அறிந்த பெரியோர் என்று, ஏத்தும் அவர்களை - புகழ்ந்து துதிக்கும் அறிவில்லாரை, கண்டால் - காணில், தூய் காட்சியார் - மாசில்லாத அறிவையுடையவர், துறந்து எழுவர் (அவர் எதிர் செல்லாது) நீங்கிச்செல்வர்.

தீயோரைப்புகழ்ந்து பேசும் அறிவில்லார் எதிர்ப்படின் அவரைப்பெரியோர் கட்புலனுக்காகாதும்பரிசியார்என்பது கருத்து. தூய்க்காட்சியார் எ. துறந்தெழுவார் ப. தெற்ற நிகழ்காலவினையெச்சம் தெற்று பகுதி, உகரங்கெடுசந்தி, அ எச்சவிகுதி. ஏத்தும் எதிர்காலப் பெயரெச்சம ஏத்துபகுதி, துறந்து இறந்தகால வினையெச்சம துறபகுதி. (கஉக)

**122.** உணர்ச்சியே (அறிவுநூலைக்கேட்டுணரும்) உணர்ச்சியே, அச்சு ஆக - அச்சாகவும், உசாவண்டியாக (அந்நூலையாராயும்) ஆராய்ச்சியே பண்டியாகவும் (கொண்டு) புணர்ச்சி (அவற்றை) பொருந்துதலை (உடைய) புலன் ஐந்தும் - ஐம்புலன்களையும், பூட்டி (எருதுகளாக அதில்) பூட்டி, உணர்ந்து (நடத்தும் வகையை) தெரிந்து, அதனை - அப்பண்டியை, ஊர்கின்ற - நடத்துகின்ற, பாகன் (ஆன்மா எனனும்) பாகனவன், உணர்வு உடையன் ஆகும் ஏல (தனனையறியும்)

அறிவு உடையவனானால், பிறப்புபோகின்றது ஆகும் (இனி) பிறத்த லொழியும்.

கேள்வி, விமரிசம்; பாவனையென்னும் இம் மூன்றையு முடையோன் தன்னையறிந்து பிறப்பினை யொழிவான் எனப து கருத்து. பிறப்பு எ. போகின்றதாகும் ப. இசையெச்சமாக நின்ற கொண்டும் என்னும் இறந்தகாலவினை யெச்சம் பூடி என்னும் பிறவினை வினையெச்சத்தையும், அவ்வெச்சம் உணர்ந்து என்னும் தன் வினை வினை யெச்சத்தையும், அவ் வெச்சம் ஊர்கின்ற என்னும் நிகழ் காலப்பெயரெச்சத்தையும், அவ் வெச்சம பாகன் என்னும வினைமுதற் பொருளையுங் கொண்டன, உம்மை முற்று. உணர்ச்சி, உசா இவற றினிறுதியில் பிரிநிலை ஏ தொக்கதல், (கஅஉ)

---

## மூன்றுறையரையனார்

## இயற்றிய

## பழமொழி.

123. எல்லாம் - எல்லாபபொருள்களும் (இருத்தலால்) (லுவா (பிறரால்) விரும்பப்பட்ட, வரைநாட - மலைநாட்டை யுடையவனே, தமரா இல்லார்க்கு - சுற்றத்தாரை யில்லாத வர்க்கு, நகரம் உம் (சிறந்த) நகரமும், காடுபோன்றது ஆங்கு - காட்டையொத்ததுபோல, கல்வியுள் ஆய - கல்வியினுலாகிய, கழிநுட்பம் - மிக்க நுண்ணிய பொருள்களை, கல்லார்முன் - கற்றறியாதவர்முன்ப, சொல்லிய நல்ல உம் (கல்வியறிவுடையோர்) சொல்லிய நல்ல (நூற்) பொருள்

சனும், தீயனும் (அவர்களுக்கு இடையூறு தருதலால்) தீய பொருள்களாம்.

கல்லார்க்குக் கற்றோர் கூறு நூற்பொருள்கள் பெருந் துன்பமாம் என்பது கருத்து. நல்ல எ. தீய ப, போன்றது ஈறு தொகுத்தல். ஆய என்னும் இறந்தகாலப்பெயரெச்சம் நுட்பம் என்னும் வினைமுதற் பொருள் கொண்டமையால் ஆன் உருபு ஏதுப்பொருட்டு. ஆ பகுதி, யகரமெய் இடைநிலை, அ எச்சவிகுதி. தமர்முறைப்பெயர்-தாம்பகுதி, முதல் குறுகல் விகாரம், அர் பலர்பால் விகுதி. உம்மை இரண்டும் உயர்வுசிறப்புப்பொருளன. நல்ல,தீய பண்படியாகப்பிறந்த பலவின்பாற்படர்க்கைக் குறிப்புவினையாலணையும்பெயர்கள் நன்மை, தீமை பகுதிகள். (௧௨௩)

**124.** எறிதிரை - வீசும்அலைகள், சென்றுஉலாம் - பரவி யுலாவும், சேர்ப்ப - கடற்றுறையை யுடையவனே, நன்கு ஒன்று (பிறர்செய்யும்) நன்றியொன்றை, அறிபவர்- அறியுந் தன்மையோர், நாழி கொடுப்பவர்க்கு - நாழியரிசியே யாயினும (தமக்கு) கொடுப்பவர்க்கு, என்றுஉம் - எப்பொழுதும், உறுதி ஏ - பெரும்பயனையே, சூழ்க - நினைக்கக்கடவர், அது போல - அச்செய்கையைப்போல, நீர்போயும்- நடுக்கடலில் (கப்பலின்மேல்) சென்றும், ஒன்று இரண்டு ஆம் - ஒன்று இரண்டு ஆகும், வாணிகம் - வாணிபம், இல்-இல்லை.

கைம்மாறு நினையாமல் உபகாரந் தமக்குச் செய்தவர்க்குத் தாம் எப்பொழுதும் நன்மையையே நினைக்கவேண்டும் என்பதுகருத்து. அறிபவர் எ. சூழ்க ப. ஒன்று என்பது செயல்மேல் நிற்றலால் நன்கு ஒன்று இருபெயரொட்டுப்

பண்புத்தொகை. நன்கு பண்புப்பெயர் நன்மை பகுதி, ஈறுகெடுதலும் லகரம் றகரமாகத்திரிதலும் சந்தி, கு பண்புப்பெயர்விகுதி, றசரம் னகரமாதல் மெலித்தல் விகாரம். சூழ்க வியங்கோள் வினைமுற்று-சூழ பகுதி, க வியங்கோள விகுதி. (௧௨௪)

**125.** கிளர் - விளங்கும், மணி- இரத்தினங்களையுடைய, நீர் (சிகரத்தால்) உயாந்த, கல்வெற்ப கல் மலையையுடையவனே, நாடி - ஆராய்ந்து, நமர் என்று (இவர்) நமக்கு உறவினரென்றுசருதி, நன்கு - மிகவும், புறந்தந்தார்கரு (தம்மை) பாதுகாந்தவர்க்கு, பிறரோடு - பிறரொடு (கூடி) கேடு சூழ்தல் - கேடு நினைத்தல், நினைப்பு இன்றி - நினைப்பில்லாமல், தாம இருந்த தாம் (ஏறி) இருந்த, கோடு-மாக கொம்பை, குறைத்துவிடல் - தறித்துவிடுதலை (ஒக்கும்.)

தம்மைப் பாதுகாப்பவர்க்குக் கெடுதி நினைப்பவர் அடியோடே கெடுவர் எனபதுகருத்து. சூழ்தல் எ. ஒக்கும் ப. நமர் முறைப்பெயர் நாம்பகுதி, முதல் குறுகல்விகாரம், ஆர பலர்பால்விகுதி. புறந்தந்தார் இறந்தகால வினையாலணையும் பெயாபுறந்தா ஒருசொல் நீர்மைத்தாய்நின்ற பகுதி, முதல குறுகல்விகாரம், ந சந்தி, த் இடைநிலை,ஆர்பலர்பால்விகுதி. புறந்தரல் இடந்தரல். இஃது மற்றையதற்கும் ஒக்கும். ()

**126.** இன்றி (தம்மை) இல்லாமல், அமையாத (உயிர்) வாழாத, இருமுது மக்கள் உம் - தாய்தந்தைகளிருவரும், பொன்றினமை - இறந்தமையை, கண்டு உம் - பார்த்தும், பொருள் (அழியும்)பொருளை, பொருள் ஆ (அழியாத(பொருளாக, கொள்ப ஓ (தம்மனத்தில் பெரியோர) கொள்வாரோ

(கொள்ளார்என்றபடி) ஒனறும்வகைபால் (ஆகலில்தமக்கு) கூடியவகையால், அறம் செய்க - தருமஞ்செய்யக் கடவர், குன்று உம் - மலையும், ஊர்ந்து உருளின - ஊர்ந்துருளும் ஆனால், வழி (அதுஉருளும்) வழியில், தடுப்பது - தடுக்கும் பொருள். இல் - இல்லை (அதுபோல இறக்கும பொழுது தேடிவைத்தபொருள்வந்து தடுத்தலில்லை)

வழியடுப்பதில் எனப்பாடமும உண்டு - அதற்கு ஊர்ந்துருளும் வழியில்அடையாக அடுக்கும்பொருளில்லையெனப பொருள்கொள்க. தேடிய பொருள் தாம்இறக்கும்பொழுது வந்து தடுப்பதில்லாமையால் அதைக்கொண்டுஉள்ளபொழுதே அறஞ் செய்யவேண்டும என்பது கருத்து. பெரியோர, உலகினர் தோ எ. கொள்பவே, செய்க ப. பொன்றினவை இறந்தகாலத் தொழிற்பெயர் பொன்று பகுதி, உ சாரியை சந்தி, இன் இடைநிலை, அ சாரியை, வைமவிகுதி. ஒன்றும்பெயரெச்சம் ஒன்று பகுதி. ஓ எதிர்மறை. உம்மை இரண்டனுள் முன்னது முற்று. பின்னது உயர்வு சிறப்பு.

**127.** மாய்தவன்முன் ஏ (தமக்குவரையறுத்தவாழ்நாள்) கழிதற்கு முன்னமே, வகைப்பட்ட - கூறுபாடுள்ள, நல்வினையை - புண்ணியத்தை, ஆய்வு இன்றி (இன்ன நாள் செயவோமென்று) ஆராயாமல், செய்யாதார் (பொருள்கிடைத்த பொழுதே) செய்யாதவர், பின்னைவழி - பின்பு (செய்வோமென்று) நினைந்து - நினைத்திருந்து, நோய் (தமக்கொரு) நோய், காண் பொழுதின (இறுதியில்) வந்தடைந்த காலத்தில் (தருமஞ் செய்யக்கருதி) அறம் செய்வார் காணமை (தம்பொருளைக் கொண்டு சொனனவகையே) தருமஞ்செய்

வானைப் பெறுதிருக்தல், நாய்காணில் - நாய் கண்டபொழு து, கல்காணாத ஆறு - கல்லைக்காணாத வகையை (ஒக்கும்)

பொருள்கிடைத்த பொழுதேதருமஞ்செய்யாது பின்பு செய்வோமென்றிருப்போர் உடம்பாலாகிய பயனைப்பெறார் என்பது கருத்து. காணுமை எ. ஒக்கும் தோ - ப. காணாத ஈறுதொகக பெயரொச்சம். ஏ தேறறம. (கஉஎ)

**128.** அளைம ஆரும் - மூங்கில் நிறைந்த, வெற்ப - மலை நாட்டையுடையவனே, தமர் ஏ உம் - தமது சுற்றத்தாராயி னும், தம்மை - தங்களை, புகழ்ந்து உரைக்கும் போழ்துஇல்- புகழ்ந்து பேசுங்காலத்தில, அமராததனை (தம்மோடு) பொ ருந்தாத புகழை, அகற்றல் ஏ வேண்டும்(அவர்சொல்லாமல்) நீக்கவே வேண்டும், கொள்ளாதகலம் (தமக்கு) தகாத ஆபர ணங்கள், தமஎனும்- தமக்குஉரியனவாயினும், தம்மை அணி யார் ஏ (நல்லோா) தம்மை யலங்கரியாரோ.

தமக்கில்லாதகுணத்தை ஒருவனெடுத்துப் புகழ்ந்தால் நல்லோர் அதையொழிக்கவேண்டும் என்பது கருத்து. நல் லார் தோ - எ. அகற்றல்வேண்டும் ப. தமபொருளடியாகப் பிறந்த பலவின்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று தாம் பகுதி, முதல் குறுகல்விகாரம், அ பலவின்பால்விகுதி. உம் மை பிறரன்றி எனநிற்றலால் இறநதது தழுவிய எச்சம். ஏ இரண்டும் தேற்றப்பொருளன. (கஉஅ)

**129.** மறு-குற்றமுள்ள, மனத்தன் அல்லாத-மனத்தை யுடையவனல்லாத, மா-பெரிய, நலத்த - நற்குண நற்செய் கைகளையுடைய, வேந்தன் - அரசன், உறு (குடிகளிடத்து அனபு) மிகுநத, மனத்தன் ஆகி - மனத்தை யுடையவனுகி,

ஒழுகில் - நடந்தால், செறு மனத்தார் - கொல்லுங் கருத்தையுடைய பகைவர், பாயிரம் (தமது) வரலாற்றை, கூறி (எடுத்து) சொல்லி, படை - சேனையோடு, தொக்கால் உம் (அவன்மேல்) திரண்டுவந்தாலும், என்செய்ப - யாதுசெய்ய வல்லோர், ஆயிரம் காக்கைக்கு (அவ்வரசனது நடக்கை) அளவில்லாதுதிரண்ட காக்கைகளுக்கு, ஓர்கல் - ஒருகல்லாகும்.

குடிகளிடத்து அன்புள்ள அரசனமேல் பகைவர்திரண்டும் அவனை வெல்லார் என்பது கருத்து. ஒழுகின் என்னும் எச்சத்தினின்று பிரிந்த ஒழுகல் எ. கல் ப. வரலாறு கூறலவிரதத்தை யெடுத்துச் சொல்லுதல். நலத்த பண்படியாகப் பிறந்த குறிப்பு வினைப்பெயரெச்சம் நலம் பகுதி, அத்து சாரியை, அ எச்சவிகுதி, ஈறறுமெய்யும் சாரியையின் அகரவுயிரும் ஈற்றுயிரும் கெடுதல் சந்தி. செய்ப பலர்பாற படர்க்கை யெதிர்காலமுற்று செய் பகுதி, ப விகுதி. தொககால் என் புதனிறுதியில் உயர்வு சிறப்பும்மை தொகுத்தல்.)

130. அறைகல் - பாறையாகிய கல்லின்மேல், அருவி - அருவி யாறு (விழாநின்ற) அணி - அழகிய, மலை நாட - மலைநாட்டையுடையவனே, தேறற - தெளிவுபெற, கற்று அறிவார் (நூல்களை) கற்றறிந்தடங்கினவர், கண்டது - ஆராய்ந்தறிந்தது, அடக்கம் (யாவருக்கும்) பணிந்து நடத்தல், அடங்காதார் - கற்றறிந்தடங்காதவர், பொச்சாந்து உம் - மறந்தும், தம்மை புகழ்ந்து உரைப்பார் - தம்மைப் புகழ்ந்து பேசுவர், நிறைகுடம் - நிறைந்தகுடம், நீர் தளும்பல் இல் - நீர்ததும் புதலில்லை (குறைந்தகுடம் ததும்பும் என்றபடி.)

கற்றறிந்தவர் அடங்குவர்கல்லார் அடங்கார் என்பது கருத்து. கண்டது, அடங்கார் எ. அடக்கம், உரைப்பார் ப.

பொச்சாந்து என்னும் இறந்தகால வினையெச்சம் புகழ்ந்து என்னும் இறந்தகாலவினை யெச்சங்கொண்டது. பொச்சா பகுதி, ந் சந்தி, த் இடைநிலை; உ எச்சவிகுதி. புகழ் பகுதி-தளும்பல் தொழிற்பெயர் தளும்பு பகுதி, உகரக்கேடு சந்தி, அல் விகுதி. தளும்பல் எனவும் பாடம். உம்மை இறந்தது தழுவிய இழிவுசிறப்பு. (௧௩0)

131. நாவாய் - கப்பல்கள், களிகள் போல் - கள்ளைக் குடித்து ஆடி னாரைப்போல், தூங்கும்-அசையா நிற்கும், கடல் சேர்ப்ப-கடற்றுறையையுடையவனே, கோவாத-பொருந்தாத சொற்களை, சொல்லும் - சொல்ல வல்ல, குணன் இல்லாத மாக்கள் ஐ-நற்குண மில்லாதவரது, நாவாய்- நாக்காகிய இடத்தை, அடக்கல் - அடக்குதல், அரிது ஆகும் (பிறர்க்கு) அரியதாம், வளியாங்கி-காற்றைவாங்கி, தோட்கு இடுவார் - தோளின் மேலிடவல்லவர், இல் (உலகில்) இல்லை.

பயன் படாதசொற்களைப் பேசுவோர் நாக்கையடக்குதல் அரிது என்பது கருத்து. அடக்கல் எ. அரிதாகும் ப. ஐ, கு உருபுமயக்கங்கள், மக்கள் மாக்கள் முதனிலைவிகாரம். கோவாத எதிர்மறைப் பெயரெச்சம் கோ பகுதி, வ் சந்தி, ஆ எதிர் மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, து சாரியை, உகரக்கேடு சந்தி, அ எச்சவிகுதி. (௧௩௧)

132. அடக்கம் இல் (பிறரால் அடக்கவும்) அடங்குதலில்லாத, உள்ளத்தன் ஆகி-மனத்தை யுடையவனாகி, நடக்கையின் - ஒழுக்கத்தில், ஒள்ளியன் அல்லான் மேல்-நல்லவனல்லாதவனிடத்து, உடை பெருஞ்செல்வத்து (தமது) உடைய அரசச்செல்வத்தில், உயர்ந்தபெருமை - உயர்ந்த அதிகாரத

டைய, வைத்தல் (அரசன்) வைத்தல், குரங்கு இன் கை-குரங்கினது கையில், கொள்ளிகொடுத்துவிடல் - நெருப்புக்கட்டையைக்கொடுத்தல் (ஒக்கும்.)

அரசன் ஒருவனிடத்து அதிகாரம் வைக்கும் பொழுது அவனியல்படையாராய்ந்து வைக்கவேண்டும் என்பது கருத்து. வைத்தல எ. ஒக்கும் தோ-ப. செல்வத்துயர்ந்த ஏழாம் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். ஒள்ளியன் பண்படியாகப் பிறந்த பெயர்ச்சொல் ஒண்மை பகுதி, இ சாரியை, அன் விகுதி, ஈறு கெடுதலும், ளகர யகரந்தோன்றுதலும் சந்தி, கொடுத்துவிடல் தொழிற்பெயர் கொடு பகுதி, த் சந்தி, து சாரியை, விடு துணிவுப்பொருள் விகுதி, உ உனைத்தும் ஒரு பகுதி, உகரங்கெடு சந்தி, அல் விகுதி. (கஙஉ)

133. எண்ணக்குறைபடாத-எண்ணுதைக்குஅளவுபடாத, செல்வம் உம்-செல்வத்தாலும், இல் பிறப்பு உம்-குடிப்பிறப்பாலும், மன்னர் - அரசனை, உடைய (தமக்குத்துணையாக) ஆக்கிக்கொண்ட, உடைமை உம்-உடைமையாலும், மன்னர் ஆல் - பிற அரசரால், இன்னர் எனல் (இவர்) இத்தன்மையரென்று தம்மை மதிக்கச்செய்து கொள்ளல், வேண்டா-வேண்டுதலில்லை, இம்மைக்கு உம்-இப்பிறப்பிற்கும், உம்மைக்கு உம்-மறுபிறப்பிற்கும், தம்மை உடைமை (உறுதிபயப்ப) தம மனத்தைத் (தமக்குவசமாக) உடைத்தாதல், தலை-முதன்மையான காரியம்.

செல்வமுதலிய வற்றால் பிறரால் மதிக்கவரும் புகழ்ச்சியைக் கருதாது தம் மனத்தைத் தம் வசமாக்கச்செய்யக் கருதலே தலைமையான செய்கை என்பது கருத்து. உடை

மை எ. தலை ப. ஏதுப்பொருளில் வந்த மூன்றும் உருபுகள தொகுத்தல். இன்னர் சுட்டடியாகப்பிறந்தபெயர்ச்சொல்இ இடைச்சொற் பகுதி, னகரமெய் விரித்தல் விகாரம், னகர மெய்சந்தி, அர்பலர்பால்விகுதி. உம்மைஎண்ணுப்பொருளன.

**134.** எருமைமேல் - எருமையின்மேல், நாளைதுயில்வதியும் - நாளைநித்திரைசெய்யும, ஊர - மருதநிலத்தூரனே, அருமைஉடைய - பெறுதற்கு அரிய, பொருள் உடையார (அன்புஎன்னும ஒரு) பொருளையுடையவா, தம் கண் - தம் மிடத்து, கருமம் உடையாரை (ஒன்றைப்பெறும்) செய கையையுடையவரை, நாடார்-தேடார, குளம்தொட்டு-குளத தைததோண்டி, தேவழி (அங்கிருபப) தேரை (உள்ள) இடததை, செனறூர் இல்-தேடிச் செல்வோரில்லை.

உயிர்களிடத்து அனபுடையாரிடத்தில் பலரும் தாமே வந்தடைவர், அவர்தேடவேண்டியதில்லை யென்பதுகருத்து. பொருளுடையார் எ. நாடார் ப. தொட்டு இறந்தகாலவினை யெச்சம் தொடு பகுதி, முதனிலை யெழுததாய்த் தோன்றி நின்ற டகரம் இடைநிலை, உகரக்கேடு சந்தி, உ எச்சவிகுதி. நாடார எதிர் மறைபபலர் பாற்படர்க்கை வினைமுற்று நாடு பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒருபகுதி, ஆர் விகுதி, விகுதியின் ஆ முதற்குறை. (௧௩௪)

**135.** நல்லாய் - அழகுள்ளவளே, பொல்லாது சொல்லி (பிறாமேல)பழிச்சொல்லுகளைச்சொல்லி, மறைந்துஒழுகும்- ஒளித்துநடக்கும், பேதை-அறிவில்லாதவன், தன்சொல்லால ஏ-தான் சொலலுஞ் சொல்லாலே, தன்னை துயர்படுக்கும்- தன்னைத்துன்பத்தி லழுத்துவான, மணல் உள்முழுகி - மண

லினுள்முழுகி, மறைந்து கிடக்கும்-ஒளித்திருக்கும், தூண்டில் உம்-தவளையும், தன் வாயால்-தனது வாய்க்குரலால்,கெடும் (தின்போரிடத்து அகப்பட்டு) கெடும்,

பிறர்மேற பழிகூறுவோர தமக்குத்தாமே துன்பம்வருவிப்பர் என்பதுகருத்து. பேதை எ.துயர்ப்படுக்கும் ப.பொல்லாது ஒன்றன்பாற்படர்க்கைக் குறிப்பு வினையாலணையும் பெயர் பொல்லா பகுதி, து ஒன்றன்பால் விகுதி. ஏ பிரிநிலை உம்மை இழிவுசிறப்பு. (௧௨௫)

**136.** மிக்குபெருகி - மிகப்பெருகி, மிகு புனல் - ஆற்று வெள்ளம் - பாய்ந்தால் உம் - பாயினும், உபபுஒழிதல் செலலா - உவர்ப்பு நீங்காத, ஒலி கடல்போல் - ஒலிக்குங்கடல் போல,கீழ்-கீழ்மக்கள், மிக்க (அறிவு) மிகுந்த,நலஇனம்-நல்லினத்தோடு, நன்கு உடைய ஆயின் உம் - மிகவும் நட்புடையராயினும், என்றுஉம்-எப்பொழுதும. நலமனம் ஆகா-நல்ல மனமுடையவராதல் இல்லை.

கீழ்மக்கள் நல்லோரோடு கூடியிருப்பினும அவர் சிற்மைக்குணம் போகாது என்பதுகருத்து. கீழ எ. மனநலமாகா ப. கீழ் பண்பாகு பெயராய்ப்பொருளா லுயர்திணையேனும் சொல்லா லஃறிணையாதலால் நன்குடைய, ஆகா என அஃறிணை முடிபு தந்தார். ஒழிதல்செல்லா ஈறுதொக்க எதிர்மறைப் பெயரொச்சம் ஒழிதல்செல் ஒருசொல் நீர்மைத்தாய் நின்ற பகுதி. உம்மை மூன்றனுள் முன்னைய இரணை மெ உயர்வு சிறப்புப்பொருளன. பின்னதுமுற்று. (௧௩௬)

**137.** செல்வர்க்கு உம் (தமமிடத்துக் குறைசொல்லிய) செல்வமுடையவர்க்கும், நல்கூர்ந்தவர்க்கு உம - வறுமை

யுடையவாக்கும், முறைதெரிந்து (அரசன் செய்யும்) முறைமை
யைத்தெரிந்து, இறைதிரியாது - நடுநிற்றலினின்று வழுவாமல்,
நேர்ஒக்கல்வேண்டும (இருவர்க்கும்) நேராகநிற்றல்வேண்டும்,
முறைதெரிந்து உம் (செல்லும்) முறைமையைத்தெரிந்தும்
நேர ஒழுகான் ஆயின் - நடுவுநிலைமையாகச் செய்யானாயின்,
அது - அச்செய்கை, ஒருபக்கம் (ஒருபிள்ளைக்கு) ஒருபக்கத
தில், நீர் ஒழுகி (தாய் தன் முலையில்) நீரினையொழுக்கி, பால்
ஒழுகும ஆறு (ஒருபிள்ளைக்கு ஒருபக்கத்தில்) பாலொழுக்கும்
வகையை (ஒக்கும.)

செல்வர் வறியர் என்னும் இருவகையோரிடத்தும்தாட
்சணியம்பற்றி அரசன் ஒரு பக்கஞ்சாயாது நடுவாகநிறக
வேண்டும் எனபதுகருத்து. அது எ. ஒக்கும் தோ ப. முறை
தெரிந்து எனவும் பாடமுண்டு. இறை திரியா நீக்கப்பொரு
ளில்வந்த ஐந்தாம வேற்றுமைத் தொகைநிலைதொடர்,
திரியா ஈறுதொக்க எதிர்மறை வினையெச்சம். இறை நடுநிற்
றல இருபகுதி, உகரக்கேடு சநதி, ஐ தொழிற்பெயர் விகுதி.
நல் குராதவா ஈறு திரிந்த இறநதகால வினையாலணையும்
பெயர் நல்கூர் பகுதி. (௧௩௭)

138. புன்சொல் உம் - கடுஞ்சொல்லால்வரும் பயனை
யும், நன்சொல் உம் - இனிய சொல்லால்வரும் பயனையும்,
பொய் இன்று - உண்மையாக, உணர்கிற்பார் - ஆராயந
தறிய வல்லவர், வன்சொல்வழியர் ஆய் - கடுஞ்சொல் (கூறி
யொழுகும்) வழியையுடையவராய், வாழ்தல் உம் உளவா
ம் ஓ - வாழ்தலும் உளதாகுமோ (இல்லை என்றபடி) புன்
சொல் (பிறனாச்சொல்லும்) கடுஞ்சொல், ஒருவனை இடாய

படுப்பது அல்லால்-ஒருவனைத் துன்பப்படுத்துவ தல்லாமல், இன்சொல் - இனியசொல், இடர்ப்படுப்பது இல் (ஒருவனை) துன்பப்படுத்துவது இல்லை.

இன்சொல், கடுஞ்சொல் என்னும் இவற்றுள்வரும் பயனையுணரும் அறிவுடையோர் ஒருபோதும் கடுஞ்சொற்சொல்லார் என்பது கருத்து. வாழ்தல் ஏ. உண்டாமோ ப. இடர்ப்படுப்பது எதிர்காலத்தில் வந்த தொழிற்பெயர் - இடர் என்னும் பெயர்ச்சொல் தன்னை வினைப்படுத்தவரும் படு விகுதியொடுகூடி ஒருசொற்றன்மைத்தாய் நின்றஇடர்ப்படுபகுதி, ப் சந்தி, ப் இடைநிலை, அ சாரியை, து தொழிற்பெயர்விகுதி. உணர்கிறபார் ஈறு திரியாது வந்த வினையாலணையும் பெயர் உணர் பகுதி, கில் ஆற்றலுணர்த்தும் விகுதி, அனைத்தும்ஒரு பகுதி, உம்மை இழிவு சிறப்பு. ஓ எதிர்மறை. (௧௩௮)

---

நல்லாதனார்

இயற்றிய

திரிகடுகம்.

139. தன்குணம் - தனது (குடிப்பிறப்பின்) குணம், குன்றாமை - குறைவுபடாமைக்கு (ஏதுவாகிய) தகைமை உம். ஒழுக்கமும், தாஇல் - கெடுதலில்லாத, சீர் - கீர்த்தியையுடைய, இன்குணத்தார் - இனிய குணத்தினையுடையவர், வினை செய்தல் உம் - ஏவிய தொழில்களைச் செய்தலும், நன்கு - நல்லறிவை, உணர்வின் - அறியும் அறிவையுடைய, நான்மறையாளர் - அந்தணர் (வகுத்த) வழி (நூல்) வழியில்

செலவு உம் - நடத்தலும், இ மூன்று உம் (ஆகிய) இம்மூன்றும், மேன்முறையாளர் - மேலாகிய முறையினையுடையவரது, தொழில் - தொழில்களாம்.

மூன்று எ. தொழில் ப. குன்றுஈறுதொக்க எதிர்மறைத் தொழிற்பெயர்குன்று பகுதி. ஏவினை பலவின்பாற்படர்க்கை இறந்தகால வினையாலணையும் பெயர் ஏவுபகுதி, உகரக்கேடு சந்தி, இன் இடைநிலை, அ விகுதி. உம்மைமுற்று. (கஙௌ)

**140.** தாளாளன் என்பான் - முயற்சியுடையானென்று சொல்லப் படுவான், கடன்படாமல் (பிறரிடத்தில்) கடன் படாமல், வாழ்பவன் - வாழ்கின்றவன், வேளாளன் என்பான் - உபகாரியென்று சொல்லப்படுவான், விருந்து (வந்த விருந்தினர், இருக்க (பசித்து) இருக்க. உண்ணுதான் (தான்) புசியாதவன். கோளாளன் என்பான் (பிறர் தெரிவித்தவைகளை மனத்தில்) கொள்ளுதலில் வல்லவனென்று சொல்லப படுவான், மறவாதான் (கேட்டவற்றை) மறவாதவன், இ மூவர் (ஆகிய) இம்மூவரையும், கேள் ஆக (தனக்கு) நட்பினராக, வாழ்தல் (ஒருவன்கொண்டு) வாழுதல், இனிது - இன்பந்தருவதாம்.

வாழ்தல் எ. இனிது ப. தாளாண்மை, வேளாண்மை என்னும் பண்புப்பகுதிகளின் ஈறுகெடுதல் சந்தி,அன் விகுதி. என்பான் படுவிகுதிதொக்குநின்ற எதிர்காலச்செயப்பாட்டு வினையாலணையும் பெயர் என்பகுதி. (கசo)

**141.** வருவாய் உள்(தமக்குவரும்) ஊதியத்துள், கா கூறு, வழங்கி (தருமத்தின்பொருட்டு) செலவுசெய்து, வாழ்தல்-உயிர்வாழ்தலும், செரு-போரில்,வாய்ப்ப(வெற்றி)

கிடைக்க, செய்தது (அரசர்தமக்குத்துணையாயிஞோர்)செய்த காரியங்களை, நாடாமல்-ஆராயாமல், சிறப்புஉடைமை(விளங்கித்தோன்றும) சிறப்பினை யுடைத்தாகுந் தன்மையும், பல-பலநூலுள், எய்த - பொருந்த, நாடி-ஆராய்ந்து, நல்லவை-நல்லநூல்களை, கற்றல் - கற்றலும், இ மூன்று உம் (ஆகிய) இந்தமூன்றும், நலம் - நற்குண நற்செய்கைகளால், மாட்சி பெருமை (பெற்ற) நல்லவர் கோள்-நல்லவருடைய கொள்கைகளாம்.

மூன்று எ. கோள் ப. தனக்குவரும்ஊதியத்தைநான்கு கூறுசெய்து இரண்டுகூறு தனக்கும், ஒரு கூறு ஆஸ்திக்கும் ஒருகூறு அறத்திற்கும் கொளளல். வருவாய் தொழிற்பெயர் வா பகுதி, முதல் குறுகலும் ரகரவுகரம் விரிதலும் விகாரம் வாய் விகுதி. இது அவ்வாகுபெயராய்ப் பொருள் மேல்நின்றது. வழங்கி இறந்தகால வினையெச்சம் வழங்கு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி. (கசக)

142. உண்பொழுது - உண்ணுதற்குரிய காலத்தில், நீராடி - ஸ்நானஞ்செய்து, உண்டலும் - உண்ணுதலும், என்பெறினும் - யாதுபயன் பெற்றாலும், பால்பற்றி - ஒருபட்சத்தினின்று, சொல்லாது விடுதல்உம் - (ஓரம்) சொல்லாதிருத்தலும், தோல்வற்றி (உணவில்லாமையால்) உடம்புலர்ந்து, சாயின் உம் - இறத்தல்வந்தாலும், சான்றாண்மை-அறிவால் நிறைந்ததன்மை, குன்றாமைஉம் - குறையாமல் நடத்தலும், இமூன்றுஉம் (ஆகிய) இந்த மூன்றும், தூயம் என்பார் (மனமொழிமெய்களால்) புனிதமுடையோம் என்பவரது, தொழில்-தொழில்களாம்.

நீராடி யுண்ணுதல் முதலிய மூன்றும் திரிகரண சுத்தி யுடையோர்செய்கைகள்என்பது கருத்து. வற்றினனுஞ்சினை வினை வினையெச்சம்சாயின என்னும் முதல்வினை வினையோடு முடிந்தது. வற்று பகுதி, உகரகேடுசந்தி, இரச்சவிகுதி. தோல் காரண ஆகுபெயர். ஊழினைப்பெருக்காமை என்பதிற்காண்க. அளபெடை இசைகெட்டவழிவந்தது. (கசஉ)

**143.** தன் - தன்னை - நச்சி - விரும்பி, சென்றாரை - வந்தடைந்தயாசகரை, எள்ளாத - இகழாத, ஒருவன் உம் - ஒப்பில்லாதவனும், மன்னிய - நிலையான, செல்வத்துஉம் - செல்வம்பெற்ற காலத்தும், பொச்சாப்பு - மறதியை, நீத்தான உம் - நீக்கினவனும், என்றுஉம் - எப்பொழுதும், அழுக்காறு (பிறர்செல்வங்கண்டு) பொறாமையினின்று, இகந்தான் உம் - நீங்கினவனும், இமூவர் (ஆகிய) இந்தமூவரும், நின்ற - நிலை பெற்ற, புகழ்உடையார் - கீர்த்தியையுடையவராவர்.

மூவர் எ. புகழுடையார் ப. நச்சி இறந்தகால வினை யெச்சம் நச்சுபகுதி. எள்ளா ஈறுதொக்க எதிர்மறைப்பெய ரெச்சம் எள் பகுதி. நீத்தான் இறந்தகால வினைமுற்று நீ பகுதி, த் சந்தி, த் இடைநிலை, ஆன் விகுதி. இகந்தான் வினைமுற்று இக பகுதி. செல்வத்து என்பதனிறுதியில்உயர்வு சிறப்பும்மை தொகுத்தல். (கசங)

**144.** கோல் (தனது) செங்கோலை, அஞ்சிவாழும்-அஞ்சி வாழாநின்ற, குடிஉம் - குடிகளும், குடிதழீஇ - அக்குடிகளைத்தழுவி, ஆலம்வீழ்போலும் - ஆலம்விழுதுபோல (தாங்கும்) அமைச்சன்உம் - மந்திரியும், வேலின்கடை - வேலினிடத்துள்ள, மணிபோல் - பூண்போல, திண்ணியான் - வலி

மையுடையான், காப்புஉம் (தன்னை) காத்தலும், இம்மூன்றும் (ஆகிய) இந்தமூன்றையும, படை - சேனையையுடைய, வேந்தன் - அரசன், பற்றுவிடல் - சிறிதும்விடாது நடக்கக்கடவன்.

வேந்தன் எ. பற்றுவிடல் ப. விடல் எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. முன்புகூறியதுசொல்ச. வீழ் முதனிலை திரிந்த தொழிற்பெயர் இது அவ்வாகுபெயராய்ப் பொருள்மேல் நின்றது. விழு பகுதி. அமாத்தியன் என்னும் வடசொல்தமிழில் அமச்சன் எனவாகுது இடைநிலைபடோலியாய அமைச்சன்எனநின்றது. (கசச)

145. முந்நீர் - சமுத்திரத்தின், திரையின - அலைபோல எழுந்து (விடயங்களின்) மேற்சென்று, இயங்காத (மனம்) அலையாத, மேதைஉம் - அறிவுடையவனும், நுண் - நுட்பமாகிய, நூல் - சிந்தனைகளாலும், பெருங்கேள்வி - மிகுந்த கேள்வியினுலும, நூல்களை - உண்மைநூலினது முடிவை, கண்டான்உம் - கண்டவனும், மை - குற்றமாகிய, நீர்மை- குணத்தன்மை, இன்றி - இல்லாமல், மயல்-ஆசைமயக்கினை, அறுப்பான் உம் - அறுப்பவனும், இமூவர் (ஆகிய) இம்மூவரும், மெய்நீர்மை - மெய்மைக் குணத்தையுடைய, மேல- மோட்சநெறியில், நிற்பவர் - நிற்பவராவார.

முந்நீர் ஆற்றுநீர், ஊற்றுநீர், மேகநீர் என்னு மூன்றாகிய நீரையுடையது என நிற்றலால் பண்புத்தொகைநிலைபுறத்துப்பிறந்த அன்மொழித் தொகைநிலைத்தொடர். இன்னுருபு ஒப்புப்பொருட்டு. இயங்கா ஈறுதொக்க எதிர்மறைப் பெயரெச்சம் இயங்கு பகுதி. உம்மைதொகுத்தல். (கசரு)

**146.** தன்னை - தன்னைத்தானே, வியந்து - மெச்சிக்கொண்டு, தருக்கல்உம் - அகங்கரித்தலும், தாழ்வுஇன்றி - பணிதலில்லாமல், கொன் ஒ-வீணாக, வெகுளி - கோபத்தை, பெருககல்உம் - பெருகச்செய்தலும், முன்னிய - முற்பட்ட, பல்பொருள் (பிறருடைய) பலவகைப்பட்ட பொருளையும், வெஃகும் - விரும்பும், சிறுமை உம் - அற்பகுணமும், இமூன்றுஉம் (ஆகிய) இந்தமூன்றும், செல்வம் (ஒருவனது) செல்வத்தை. உடைக்கும் - அழிக்கின்ற, படை - ஆயுதங்களாம்.

தருக்கல் தொழிற்பெயர் தருக்கு பகுதி, உகரக்கேடு சந்தி, அல் விகுதி. முன்னிய இடைச்சொல்லடியாகப்பிறந்த இறந்தகால வினையெச்சம் முன பகுதி, ஈறு தொக்குநின்ற இன இறந்தகால விடைநிலை, னகரமும் யகரமுந் தோன்றல் சந்தி, அ எச்சவிகுதி. பல்பொருள் இறுதியில் முற்றும்மை தொகுத்தல், வெஃகும்பெயரெச்சம் வெஃகுபகுதி. (கசசு)

**147.** வைததனை (ஒருவன்) வைதவசைகளை, இன்சொல்லாக - இனியசொல்லாக, கொள்வானஉம் - கொள்ளுகிறவனும், கூழை (தான்பெற்ற) கூழினை, நெய்பெய்த - நெய்வார்த்துச்சமைத்த, சோறுஎன்று- சோறென்று, மதிப்பான்உம் - மதிக்கின்றவனும், ஊறிய - மிகுந்த, கைப்பதனை- கைப்புடைய உணவை, கட்டிஎன்று-வெல்லமெனறு, உண்பான்உம் - உண்கின்றவனும். இமூவர் (ஆகிய) இநத மூவரும், மெய்ப்பொருள் (உண்மைப் பொருளின்) இலக்கணத்தை, கண்டு-அறிந்து, வாழ்வார் - வாழ்பவராவர்.

கூழ் புல்லரிசியா லாகியவுணவு. இருவினை யொப்புடையோர் கடவுளிலக்கணத்தை யறிந்துவாழ்வார் என்பது கரு

து. மூவா எ. வாழுவார் ப. கைபபது எதிாகால வினையா லணையும்பெயர் கை பகுதி. ப் சந்தி, ப் எதிர்காலவிடை நிலை, அ சாரியை, து ஒன்றன்பால்விகுதி. (கசஎ)

**148.** கண்ணுக்கு-கணகளுக்கு-அணிகலம்-ஆபரணம்,கண்ணோட்டம் உடைமை - தாட்சிணியமுடைமையாம்,காமுற்ற (தங்கணவரால்) விரும்பப் பட்ட, பெண்ணுக்கு-பெண்களுக்கு, அணிகலம்-ஆபரணம்,நாண்உடைமை-வெட்கமுடைமையாம்,நண்ணும்-வருகின்ற,மறுமைக்கு-வருபிறப்பிற்கு,அணிகலம் - ஆபரணம், கல்விஉடைமை-கல்வியுடைமையாம். இ மூன்றுஉம் (ஆகிய) இந்தமூன்றும, குறி உடையார கண் ஏ- இயற்கையறிவுடையாரிடத்தே, உள - உளவாம்.

மூன்று எ. உள ப. கண்ணோட்டம் தொழிற்பெயர்- கண் என்னும் பெயர்ச்சொல்தன்னை வினைப்படுததவரும்ஓடு என்னும் வினைப்பகுதியோடுகூடி, ணகரச்சந்தி பெறறு ஒரு சொற்றன்மைத் தாய்நின்ற கண்ணோடு பகுதி, டகரமெய் விரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி, அம் தொழிறபெயர் விகுதி. இது அவ்வாகுபெயராய்த் தாட்சிணியத்தின்மேல் நின்றது. ஏபிரிநிலை. (கசஅ)

**149.** கிளைஞர்க்கு - சுற்றத்தார்க்கு, உதவாதான் - உதவி செய்யாதவனது, செல்வம் உம்-பொருளும், பைங்கூழ்-பசியபயிரை, விளைவின்கண் (தனக்கு) பயன்கொடுக்கும் இடத்தில், போற்றான் - பாது காக்கமாட்டாதவனது, உழவுஉம்- உழவுதொழிலும், இளையன் ஆய் - இளமைப்பருவமுடையவனா யிருந்தும், கள் உண்டு - மதுவையுண்டு, வாழ் வான்- வாழுகின்றவனது, குடிமை உம் - குடிபபிறப்பும், இ மூன்

றுஉம் (ஆகிய) இந்த மூன்றும், உள்ளனபோல - நிலைநிற்பனபோல (தோன்றி) கெடும்-பினனழியா நிற்கும்.

மூறறு எ - கெடும் ப. கிளைஞர்பலர்பாற் படர்க்கைப் பெயர்ச்சொல் கிளை பகுதி, ஞ் பெயரிடைநிலை, அர் விகுதி.()

150. நன்றி (ஒருவர்) செய்த, உதவியின், பயன் - பிரயோசனத்தை, தூக்காத - அளந்தறியாத, நாண் இலியும் - வெட்கமில்லாதவனும், சான்றோர் முன் - பெரியோர் முன்னே, மன்று இல் - சபையில், கொடும்பாடு - கொடியசொற்களை, உரைப்பான் உம் - சொல்லுகின்றவனும், நன்று - நற்செய்கை, இன்றி - இல்லாமல், அடைக்கலம்வைத்த - அடைக்கலமாக வைத்தபொருள்களை, கொள்வான் உம் - அபகரிக்கின்றவனும், இ மூவர் (ஆகிய) இந்த மூவரும், எச்சம் (தமக்குப்பின்) சந்தானத்தை, இழந்துவாழ்வார் - இழந்துவாழ்வார்கள்,

பிறர்செய்த வுதவியை நினையாதோர் முதலிய மூவரும் தமக்குப்பின் சந்ததியில்லாதவராவர் என்பதுகருத்து. இவர் எ. வாழ்வார் ப. அடைக்கலம்தொழிற்பெயர் அடைபகுதி, கு, அல் இரண்டுஞ்சாரியைகள், க்தோற்றமும் உகேடும்சந்தி, அம் விகுதி. எச்சம், வினைமுதற் பொருளில்வந்த தொழிற்பெயர் எஞ்சு பகுதி, மெல்லெழுத்து வல்லெழுத்தாதல் விகாரம், உகரக்கேடு சந்தி, அம் வினைமுதற் பொருளில்வந்த விகுதி. தூக்கா ஈறுதொக்க எதிர்மறைப்பெயரெச்சம் தூக்குபகுதி.()

151. நோ (தமக்குவரும்) வருத்தத்தை, அஞ்சாதார்ஓடு - அஞ்சி வாராமற் பாதுகாவாதாரோடு (கொண்ட) நட்பும் - சிநேகமும், விருந்து - விருந்தினரை (கண்டு) அஞ்சும் - அஞ்சுகின்ற, ஈர்வளையை - மனைவியை, இல்லத்து - வீட்டில் (வைத்

துக்கொண்டு) இருத்தல் உம் - வாழ்தலும், சீர் - சிறப்பை, பயவாத - தராத, தன்மை - குணத்தையுடைய, இல்லாளர் - இல்வாழ்வார்க்கு, அயல் இருப்பு உம் - பக்கத்திலிருத்தலும், இ மூன்று உம் (ஆகிய) இந்த மூன்று செய்கையும், நன்மை (ஒருவனுக்கு) நன்மையை, பயத்தல்இல - தருதலில்லையாம்.

மூன்று எ. பயத்தலில ப. சாவலை அறிந்தெடுத்த சங்கவலையலையுடையாள் என நிற்றலால் வினைத்தொகைநிலைபுறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. நொ நோ நீட்டல் விகாரம். (௧௫௧)

152. இல்லார்க்கு - தரித்திரருக்கு, ஒன்று - ஒருபொருளை ஈயும் - கொடுக்கும், உடைமை உம் - பொருளும், இ உலகில் - இந்தவுலகத்தில் (உள்ளபொருள்களினுடைய) நில்லாமை - நிலையாமையை, உள்ளும் - விசாரித்தறியும், நெறி - வழியில், பாடு உம் - செல்லுதலும், எ உயிர்க்கு உம் - எவ்வகைப்பட்டவுயிர்களுக்கும், துன்பு - துன்பம், உறுவ - பொருந்தியகாரியங்களை, செய்யாத தூய்மை உம் - செய்யாத பரிசுத்தகுணமும், இ மூன்று உம் (ஆகிய) இந்தமூன்றும், நன்று - தருமநூல்வழியை, அறியும் - அறிகின்ற, மாந்தர்க்கு உள - மனிதர்களுக்கு உண்டாம்.

மூன்று எ. உள ப. மாந்தர் இது பன்மையிலல்லாமல் ஒருமையில் வாராது. உறுவ எதிர்கால வினையாலணையும் பெயர். உறு பகுதி. உம்மைமுற்று. (௧௫௨)

153. கா - சோலையை (வைத்த) அறம் - தருமத்தின் பொருட்டு, குளம்தொட்டான் உம் - குளத்தைத் தோண்டினவனும், நா இன் ஆல் - நாவினால், வேதம் - வேதங்களை (ஓதி)

களை (அவற்றின்) வரம்பை, கண்ட - அறிந்த. பார்ப்பான் உம் - அந்தணனும், தீது - தீயவழியை, இகந்து - கடந்து, ஒல்வது (தனக்கு) கிடைத்தபொருளை. பாத்து (பிதிரர் முதலியோர்க்கு) பங்கிட்டு. உண்ணும் - உண்ணுகின்ற, ஒருவனும் - இ மூவர் (ஆகிய) இந்த மூவரும். செல்வர்- செல்வத்தையுடையவர், எனப்படுவார் - என்று சொல்லப் படுவார்.

குளந் தோண்டுவித்தவன் முதலிய மூவரும் இம்மை மறுமைக்குரிய செல்வமுடையோர் என்பதுகருத்து. என என்னுந் தந்தொழிலுக்குப் பிறரால் என்னும் மூன்றும்வேற றுமை வினைமுதலும். படுவார் என்னும் தம்மினாகிய தொழி லுக்குச் செல்வர் என்னும செயப்படுபொருள் வினைமுதலும் ஆகக்கொள்க. ஏ இடைச்சொல். (கருரு)

**154.** நிறை (புலன்களின்மேற் போகாது) நிறுத்தலையு டைய, நெஞ்சு உடையானை - மனத்தையுடையவனை, நல்கு ரவு - வறுமை, அஞ்சும் - அஞ்சாநிற்கும், அறனை - தருமத் தையே. நினைப்பானை - நினைப்பவனை, அல்பொருள் - பாவம். அஞ்சும் - அஞ்சாநிற்கும், மறவனை - கொலைத்தொழிலுடை யோனை. எ உயிர் உம் - எல்லா உயிர்களும், அஞ்சும்-அஞ்சா நிற்கும், (ஆதலால்)இ மூன்று உம்-இந்த மூன்றச்சமும், திற வதின் - வேறுபாட்டினின்று, தீர்நத, நீங்கித்தம்முளொத்த, பொருள் - பொருள்களாம்.

மூன்று எ. பொருள் ப. மறவன் காரணப்பெயர் மரம் பகுதி, ஈறுகெடுதலும் வகரத்தோற்றமும் சாதி, அன்விகுதி. இன் உருபு நீக்கப்பொருட்டு. (கருச)

155. வாய் (நீர்வரும்) வழி, நன்கு அமையாத - நன்றாக அமைந்திராத, குளன் உம் - தடாகம் போல்வாரும், வயிறு ஆர - தன்வயிறுநிரம்ப, தாய் - தாயினது, முலை உண்ணாத- முலைப்பாலையுண்ணாத, குழவி உம் - குழந்தையும், செய்மரபு இல் - இளமைப் பருவத்தில், கல்வி - கல்வியினது, மாண்பு- மாட்சிமை, இல்லாத - பெறாத, மாந்தர் உம் - மனிதரும், இ மூவர் (ஆகிய) இந்தமூவரும், நல்குரவு - வறுமையால், சேரப்பட்டார் - சேரப்பட்டவராவர்.

மூவர் எ. சேரப்பட்டார் ப. நல்குரவு சேரப்பட்டார் வினைமுதற் பொருளில்வந்த மூன்றும்வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். அமையா, உண்ணா ஈறுதொக்க எதிர்மறைப பெயரொச்சங்கள். (கருரு)

156. ஈதற்கு (பிறர்க்கு) கொடுக்கும்பொருட்டு, பொருளை, திரவியத்தை, செய்க - தேடக்கடவன, அறம்நெறி- தரு மமார்க்கம், சேர்தற்கு (தன்னைத்தேடி)அடைதறபொருட்டு, பெருநூலை-பெரியநூல்களை, செய்க - கற்கக்கடவன், யாது உம் - யாதாயினும், சொல்லை - ஒருசொல்லை, அருள்புரிந்து- கிருபைசெய்து, சொல்லுக - சொல்லக்கடவன், இ மூன்று உம் (ஆகிய) இந்தமூன்று செயல்களும், இருள் - இருண்ட, உலகம்-நரகததை,சேராத-சேரவொட்டாத, நெறி-வழிகளாம்.

நல்வழிப்படுத்தற்குப் பொருள்தேடல் முதலிய மூன் றும் ஒருவனை மோட்சத்திற் சேர்க்கும் என்பது கருத்து. மூன்று எ. ஆறு ப.குவ்வுருபுஇரண்டும்நிமித்தப்பொருளன.

157. கொண்டான் - கொண்டகணவனுடைய, குறிப்பு, குறிப்பினை, அறியாள் - அறிந்து நடக்கின்றவள், பெண்டா

ட்டி - மனைவியாவள், கொண்டன (தான்) மேற்கொள்ளும் விரதங்களை, செய்வகை - செய்யும் விதிப்படி, செய்வான் - செய்கின்றவன், தவசி - தவசியாவான், கொடிது - தீங்கினை, ஒருவி - நீக்கி, நல்லவை - இதமானவைகளை, செய்வான் - (உயிர்களுக்கு) செய்கின்றவன், அரசன் - அரசனுவான் இவா மூவா - இவ்வியல்பினராகிய மூவரும், பெய்எனப்பெய என்றுசொல்ல, மழைபெயயும் - மழை பெய்யாநிற்கும்.

கணவன் குறிப்பின்வழியாயுள்ள மனைவி முதலியமூவா வழிப்பட்டு உலகியல் நடக்கும் என்பது கருத்து. மழை எ. பெயயும் ப. தவசி காரணப்பெயர் தவசு பகுதி, உகரக்கேடு சாரி, இ பெயர்விகுதி. (சருஎ)

158. ஐங்குரவர் - ஐந்துபெரியோருடைய, ஆணைமறுத தல் உம் - ஆக்கினையை மறுத்தலும், ஆர்வுஉற்ற - விரும்பப் பட்டவைகளில், எஞ்சாத - குறையாத, நட்பின்உள் - சிநேக ரிடத்து, பொய்வழக்கு உம் - பொய்பேசுதலும், நெஞ்சு - (தன்) மனதால், அமர்ந்த - விரும்பப்பட்ட, கற்பு உடை யாளை - கற்பினையுடைய மனைவியை, துறத்தல் உம் - விடுத லும், இமூன்று உம் (ஆகிய) (இந்தமூன்றும், நல்புடை - தரும த்தின் வகையை, இலாளர் - இல்லாதவருடைய, தொழில் - தொழில்களாம்.

ஐங்குரவராவார் அரசன், உபாத்தியாயன், பிதா, தமை யன, ஆசாரியன. குரவராணை மறுத்தல் முதலிய மூன்றும பாவிகள் செயல் எனபது கருத்து. எஞ்சாத எதிாமறைப் பெயரொச்சம எஞ்சுபகுதி. (சருஅ)

### காகனார்
இயற்றிய
### நான்மணிக்கடிகை.

159. அகில் - அகிலானது, கள்ளிவயிற்றின் - கள்ளியினதுவயிற்றில், பிறக்கும், தோன்றும், ஒள் அரிதாரம் - ஒள்ளிய அரிதாரம் ஆனது, மான்வயிறு - மானினதுவயிற்றில, பிறக்கும - தோன்றும், பல்விலைய - அளவில்லாத விலையையுடைய, முத்தம் - முத்தமானது, பெருங்கடல் உள - பெரிய கடலில், பிறக்கும் - தோன்றும் (அதுபோல) நல்ஆள் - நல்லொழுக்கமுடையோனை, பிறக்கும்குடி - பிறக்குங் குடியினது தன்மையை, அறிவார் - அறிபவர், யார் - எவர் (ஒருவரும் இல்லை என்றபடி.)

அகில்முதலிய பொருள்கள் தோன்றிய இடங்கருதாது அவற்றை விசேடமாகக் கொள்ளுதல்போல நல்லவனொருவன் பிறந்த குடியினைக் கருதாது அவனை விசேடமாகக் கொள்வர் என்பது கருத்து. அறிவார் எ. யார ப. பிறக்கும் செய்யும் என்னும் வினைமுற்று பிற பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும், உகரக்கேடும்சந்தி, உம் விகுதி. யாவர்யார் வகரவுயிர் மெய்கெடுதல் புணர்ச்சியில் விகாரம். நலலாள் னகரவீறு ளகரவீறாகத்திரிந்தது. பெருமான பெருமாள் என வருதல் ந - எ. உருபு (இதறகிதுமுடிபு) எனனும் புறனடைச்சூத்திரத்தில் காண்க. (௧௫௯)

160. கழிவு — கழிந்தபொருட்கு, இரக்கம் - இரங்குதல் கற்றாமுன் - கற்றுணர்ந்தவரிடத்து, தோன்றா - தோன்றாவாம், காதலித்தொன்று - விரும்பிய ஒருபொருளை, உற்றார்முன் - பெறுவதற்கு முயல்வாரிடத்து, உறுமைமுதல் (தமக்கு)

அவ் வொருபொருள் கிடையாமைக்குக் காரணம், தோன் று-தோன்றுவாம், தெற்றென - தெளிவுபெற, அல்லபுரிந்தா ர்க்கு - தீச்செயல்களைபயின்று வந்தவர்களுக்கு,அறம்தோ ன்று - தருமச்செய்கை தோன்றுவாம், வெகுண்டார் முன்- (ஒருபொருள்மேல்) கோபித்தலை யுடையவரிடத்து,எல்லாம் (அப்பொருளிலுள்ள)எல்லா நன்மைகளும், தோன்றுகெடும்- தோன்றுதனவாய்க்கெடும்.

தமக்கு எய்தாமைக்குத் தோன்றும் இடையூறு எனப் பொருள் கொண்டு உறுமது எனப்பாடங் கொள்ளுதலும் உண்டு. இரக்கம், முதல், அறம், எல்லாம் எ. தோன்று, கெடு ம் ப. காதலித்த இறநதகாலப் பெயரெச்சம் காதலி ப. உறு ஈறு தொகுத்தல். (கசO)

**171.** கடிய - பிறரஞ்சத்தக்க செயல்களில், கன்றுமை வேண்டும் - வயிரங்கொள்ளா திருத்தல்வேண்டும், பிறர் செய்த (தனக்கு) அயலார்செய்த, நன்றி ஐ - உதவியை, நன்றுஆக (சிறிதாயினும்) பேருதவியாக, கொளல்வேண்டும் (மனத்தில்) கொள்ளுதல்வேண்டும், என்று உம்- எந்நாளும், தன்கண் - தனனிடத்து, வெகுளி - கோபத்தை, விடல்வே ண்டும் - நீக்குதல் வேண்டும், ஆக்கம் (தன் செல்வத்தை) சிதைக்கும்வினை - கேடுசெய்யும் தொழிலை, அடல்வேண் டும் - கெடுத்தல்வேண்டும்.

கன்றுமை, கொளல், விடல், அடல் எ. வேண்டும் ப. கன்றுமை எதிர்மறைத் தொழிற்பெயர் - கன்று பகுதி, உக ரக்கேடுசந்தி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒருபகுதி; மை விகுதி. அடல் தொழிற்பெயா அடு பகுதி. வேண்டும் தேற்றப்பொருளில் வந்த தொழிற்பெயர். (சகஎ)

162. பண்அமையாத - வீக்குதலமையாத, யாழ்இன் - வீணையோசையைப் பார்க்கிலும், பறைநன்று - பறையொலியேநல்லது, பீடுஇலாத - பெருமை யழிந்த, மாந்தா இன் - புருடரைப் பார்க்கிலும், நிறைநின்ற - கற்பின்வழி நின்ற, பெண்நன்று - பெண்ணேநல்லவள், பண்அழிந்து - ஒழுக்கம் அழிந்து, ஆர்தல்இன் - உண்ணுதலைப் பார்க்கிலும், பசித்தல் நன்று - பசித்திருத்தலே நல்லது, பசைந்தார்இன் - அன்புகொண்டவரினின்றும், தீர்தல்இன் - நீங்குதலைப் பார்க்கிலும், தீபுகுதல் - தீயிற்புகுதலே, நன்று - நல்லது.

பறை, பெண், பசித்தல், தீப்புகுதல் எ. நன்று ப. எழுவாயினிறுதியில் பிரிநிலை ஏ தொகுத்தல். இன்உருபு உயாவுகுறித்தலில் வந்த எல்லைபபொருட்டு. இலா அமையா ஈறுதொக்க எதிர்மறைப் பெயரெச்சங்கள். (௱௬௨)

163. இன்மை (ஒருவன்றனக்கு) வறுமையை, வேண்டின் - விரும்புவானானால், இரவுஎழுக - இரக்கக்கடவன், இநிலத்து - இவ்வுலகத்தில், மன்னுதல் வேண்டின்-எபபொழுதும்நிலைபெறவிரும்புவானானால், இசைநடுக-புகழைநிறுத்தக் கடவன், தனஒடு செல்வது - தன்னோடு மறுமைக்குத்துணையாய்வருவதை, வேண்டின்-விரும்புவானானால், அறம்செய்க-தருமஞ்செய்யக்கடவன், வெல்வது - வெற்றியை, வேண்டின் - விரும்புவானானல், வெகுளிவிடல் - கோபத்தை விடக் கடவன்.

ஒருவன்தோ எ. இரவெழுக, நடுக, செய்க, விடல் ப வெகுளி தொழிற்பெயர் வெகுள் பகுதி, இ விகுதி. விடல் உடன்பாட்டில் வாத வியங்கோள் வினைமுற்று விடு பகுதி,

உகரக்கேடு சந்தி, அல் வியங்கோள்விகுதி, வேண்டின் எதிர் கால வினையெச்சம் - வேண்டு பகுதி, உகரக்கேடுசந்தி, இன் எச்சவிகுதி. (கசுரு)

**164.** பிறிதாஉயிரை - மற்றோருயிரை, அலைப்பான் - வருத்த, ஆக்கல் உம்-வளர்த்தலும், குற்றம்-குற்றமாம், விலைப்பால்இல் - விலைப்பகுதியால், ஊன்-மாமிசத்தை, கொண்டு-வாங்கி, மிசைதல் உம் - உண்ணுதலும, குற்றம் - குற்றமாம், சொலல்பால அல்லாத-சொல்லுந்தன்மையையுடையன வல்லாதசொற்களை (பழிச்சொற்களென்றபடி) சொல்லுதல்உம் (எடுத்து) சொல்லுதலும், குற்றம் - குற்றமாம், கொலைபால் உம் (ஊனைவிரும்பி ஒருயிரை) கொலைசெய்யுந் தன்மையும், குற்றமேஆம் - குற்றமேயாம்.

ஆக்கல், மிசைதல், சொல்லுதல், கொலைப்பால் எ. குற்றம ப. உம்மைகள் எதிரது தழீஇயதும், இறந்தது தழீஇயதும் ஆயின்றன. ஏ தேற்றம், அலைப்பான் எதிர்காலவினையெச்சம் அலை பகுதி, ப் சந்தி, பான் எச்சவிகுதி. மிசைதல் தொழிற்பெயர். மிசை பகுதி. (கசுச)

**165.** குடிஎல்லாம் - குடிக ளெல்லாம், கோல்நோக்கி-(அரசன்) செங்கோலா லாகிய காவலை நோக்கி, வாழும்-வாழாநிற்கும், குழவிகள் - பிள்ளைகள், தாய்முலையின்-தாயினது முலையிலுள்ள, பால்நோக்கி - பாலைநோக்கி, வாழும்-வாழாநிற்கும் (அதுபோல) உலகம் - உலகம்ஆனது, வானம்துளி - வானத்திலுள்ள மழைத்துளியை, நோக்கி - பார்த்து, வாழும் - வாழாநிற்கும், கூற்று - இயமன், உலகுஇன் விளி நோக்கி - இவ்வுலகின் இறப்பினை நோக்கி, இன்பு உறும்-மகிழுவான.

குடி, குழவிகள், உலகம், கூற்று எ. வாழும், இன்புறும் ப. விளி முதனிலைத் தொழிற்பெயர். உயிரளபெடை இன்னிசைநிறைத்தலில் வந்தது. உலகின் விளிபண்புத்தற் கிழமைப் பொருளில்வந்தஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.()

166. ஒருவற்கு - ஒருவனுக்கு, திருஇன்-செல்வம்போல, திறல் உடையது - வலிமையை யுடைய பொருள், இல்லை (வேறு) இல்லை, கற்றல்இன் (ஒருவனுக்கு) கற்ற கல்விபோல் வாய்த்த - பயன்படும் பொருள்கள். பிறஇல்லை - வேறில்லை, எறறுஉள்உம் - யாதினுள்ளும், இன்மைஇன்-வறுமைபோல, இன்னாதது இல்லை - கொடியது ஒன்றில்லை, இலம் என்னும் (யாதொருபொருளும்) இல்லோம் என்றிரக்கும், வன்மை இன் - வலிமைபோல, வன்பாட்டதுஇல்-வலியதிறமுடைய செய்கை வேறில்லை.

இரந்து சென்றோர்க்கு ஒன்றும் இலமென்று மறுக்கும் வன்மைபோல எனவும், இரப்போர் இரக்கப்படுவோ னிடத்துயாதும்இலமென்றுகூறும்வன்மைபோலஎனவும் இலமென்னும் வன்மையின் என்பதற்குப் பொருள்கொள்ளுதலும்ஒக்கும். திறலுடையது, பிற, இன்னாதது, வன்பாட்டது.எ. இலலை, இல் ப. இன் உருபு ஒப்புப்பொருட்டு. வாய்த்த பலவின்பாற் படர்க்கை இறந்தகால வினையாலணையும் பெயர்-வாய்பகுதி உடையது, இன்னாதது, வன்பாட்டது ஒன்றன்பாற்படர்க்கைக்குறிப்பு வினையாலணையும பெயர்கள். (கசுசு)

167. கரப்பவர்க்கு (இரப்பவர்க்கு ஒன்றுகொடாது தமதுடைமையை) ஒளிப்பவர்க்கு, செல்சாா - பற்றுக்கோடு, கவிழ்தல் - முகங்கவிழ்தலாம், எஞான்று உம் - எந்நாளும்,

இரப்பவர்க்கு - இரந்து திரிபவர்க்கு, செல்சார் - பற்றுக் கோடாயுள்ளார், ஒன்று-ஒருபொருளை, ஈவோர் (ஒளிக்காது) கொடுப்பவராம், பரப்பு அமைந்த - பரவுதல் நிறைந்த, தா னைக்கு - சேனைக்கு, செல்சார் - பற்றுக்கோடு, தறுகண்மை போர்முகத்து அஞ்சாமையாம், உயிர்க்கு - மக்களுயிர்க்கு, செல்சார் - பற்றுக்கோடு, ஊன் (ஒருயிரின்) ஊனை, உண் டல் செய்யாமை - உண்ணாமையாம்.

செல்சார் எ. கவிழ்தல், ஈவோர், தறுகண்மை, ஊ னுண்டல் செய்யாமை ப. செல்சார் செல்லும் இடம் இது ஒரு சொன்னீர்மைத்தாய்ப் பற்றுக்கோட்டின்மேல்நின்றது. கரப்பவர் ஈறுதிரிந்த வினையாலணையும் பெயர் கர பகுதி. உம்மை முற்று. (கசுஎ)

168. உயிர் அனைத்து உம் - எல்லாவுயிர்களும், பிறக்கும் கால் - பிறக்கும் பொழுதில், பேர் என உம் (அப்பிறப்பி னின்று) தவிர்க என்வும், பேரா (அவ்வுயிர்கள்)தவிரா, இறக் கும் கால் - இறக்கும் பொழுதில், நில் எனஉம் (அவ்விறத்த லினீங்கி) நிற்கவெனவும், நில்லா (அவ்வுயிர்கள்) நிலைபெறு, நல்லாள் - இலக்குமி, உடன்படில் (மனமகிழ்ந்து) உடன் பட்டால், தான் ஏ பெருகும் - செல்வந்தானே பெருகும், கெடும் பொழுது இல் (அச்செல்வம்) கெடுங் காலத்தில், கண்டன உம் (கண்ணால்) காணப்பட்ட பொருள்களும், காணது (கண்ணுக்கு) புலப்படாமல், கெடும்-அழியும்.

உயிர் எ.நில்லா,பேரா ப.செல்வம் தோ எ.பெருகும் ப. கண்டன எ.கெடும் ப.காணாஈறுதொக்கஎதிர்மறை வினையெச் சம். பேரா, நில்லா எதிர்மறை வினைமுற்றுகள். ஏ பிரிநிலை.

169. மரம்எல்லாம் - மரங்களெல்லாம், கீழ் (நிலத்தின்) கீழ், வீழ்ந்த - உருவிச்சென்ற, வேர்இன்றி-வேரறும் ஆனால், வாடும் - உலரும், நீள்நெய்தல் - (மணம்)மிகுந்தநெய்தற்பூ, நீர்பாய்-நீர்பாயும, மடை-மடையில், இன்றி (நீர்) அறருல், வாடும்-வாடாநிற்கும (அதுபோல) பொருநர்-போர்செயயும் படைவீரரது, சீர்-ஆண்மைச்சிறப்பு, போர்இன்றி - போரில்லாது விட்டால், வாடும் - அழியும், மன்னர் - அரசரது, சீர்-சிறப்பு, படைஇன்றி - சேனையில்லாது விட்டால், வாடிவிடும்-உலரும்.

மரம நெய்தல் எ. வாடும் ப. சீர் எ. வாடும், வாடிவிடும் ப. பொருநர் எதிர்கால வினையாலணையும் பெயர் பொரு பகுதி, ந் எதிர்கால விடைநிலை, அர் விகுதி. வாடிவிடும துணிவுப் பொருளில்வந்த செய்யும் என்னும் வினைமுற்று வாடு பகுதி, உகரக்கேடுசந்தி, இ சாரியை, விடு துணிவுப்பொரு ளுணர்த்தும் விகுதி, அனைத்தும் ஒருபகுதி. நெயதல் சினைப் பொருளாகிய மலர்மேல் நிற்றலால் பொருளாகு பெயர். ()

170. மலர் உண்மை - மலருண் டென்பதை, நாற்றம் (அம்மலரினது) வாசமே, உரைக்கும் - அறிவிக்கும் (அது போல) வினைநலம் (ஒருவன்) செய்கையினன்மையை, கூறிய (அவன்) சொல்லிய, மாற்றமே - சொல்லே, உரைக்கும- அறிவிக்கும், ஆக்கின் - ஆராயின், அகம் - உள்ளே, பொதிந்த - கிடந்த, தீமை - தீமையை, மனமே - மனமே, உரைக்கும் - அறிவிக்கும், முன்னம் (அம்மனதின்) வினைவினை, முகம்போல - முகத்தைப்போல, முன்உரைப்பது - முற்பட அறிவிக்கும் பொருள், இல் - வேறில்லை.

நாற்றம், மாற்றம், மணம், உரைப்பது எ. உரைக்கும் இல் ப. நாற்றம், மாற்றம் மனம் என்பவற்றி னிறுதியில் பிரிநிலை ஏ தொகுத்தல். நாற்றம் தொழிறபெயர் நாறுபகுதி, றகரமெய் விரித்தல், உகரக்கேடு சந்தி, அம்தொழிற்பெயர் விகுதி. பொதிந்த இறநதகாலப் பெயரெச்சம் பொதிபகுதி, ந் சந்தி, த் இடைநிலை, அ எச்சவிகுதி. (கஎ0)

**171.** மழைஇன்றி - மழைஇல்லாதவிடில், மாநிலத்தார்க்கு - பெரியவுலகி லுள்ளவர்களுக்கு; இல்லை (உணவு) இல்லையாம், மழைஉம் - அம்மழையும், தவம் இலார்-தவஞ்செய்யாதவர்; இல்வழி - இருக்கு மிடத்தில், இல்லை - இல்லையாம், தவம்உம் - அத்தவஞ் செய்கையும், அரசுஇலார் - அரசியலில்லாதவர், இல்வழி-இருப்பிடங்களில், இல்லை-இல்லையாம் (அதுபோல) அரசன்உம்-இராசனும், இல்வாழ்வார்-குடிகள், இல்வழி - இல்லாதவிடத்து, இல் - இல்லையாம்.

உணவு, மழை, தவம், அரசன் எ. இல்லை இல் ப. உம்மை மூன்றும் உயர்வுசிறப்புப் பொருளன. முன்னுள்ள இல் இரண்டும் இடப்பொருள்மேல் நின்ற பெயர்ச்சொற்களாகவும், பின்னுள்ளது ஈறுதொக்க எதிர்மறைக் குறிப்புப்பெயரெச்சம் ஆகவுங்கொள்க. (கஎக)

**172.** யாறு - ஆறுனது, உள்அடங்கும் - (தம்முட்புகில் புறம்போகாது) உள்ளடங்காநிற்கும். குளம்உள - குளங்களும்உளவாம், வீறுசால் - சிறப்பமைந்த, மன்னர் - அரசர்களால், விழையும் - விரும்பப்படும், குடிஉள - குடிகளும் உளவாம், தொல்மரபுஇன் - தொன்று தொட்டு வழங்கும் மரபினையுடைய, வேதம் - வேதங்களை, உறுவன - ஒக்கும்,

பாட்டுஉள - செய்யுள்களும் உளவாம், வேளாண்மை (பிறர்க்குச்செய்த) உபகாரம், வேள்வி ஒடு - யாகத்தோடு, ஒபப- ஒப்பனவாக, உள - உண்டு.

குளம், குடி, பாட்டு, வேளாண்மை என்னும் எழுவாய்கள் பால் பகா அஃறிணைப்பெயர்கள் ஆதலால் உளஎன்னும் பன்மைப் பயனிலைகள் தனித்தனி கொண்டன. ஒப்ப இடைச்சொல் லடியாகப் பிறந்த பலவின்பாற் படர்க்கை எதிர்கால வினைமுற்று வினையெச்சமாக நின்றது. வேதம் உறுவன ஒப்புப் பொருளில் வந்த மூன்றும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர், (கஎ௨)

**173.** கண்இல் (ஒருவனுக்கு) கண்ணைப்போல, சிறநத- மேம்பட்ட, உறுப்புஇல்லை - அவயவங்களில்லை (அதுபோல) கல்வியின் - கல்வியைப்போல, துண்ணிய ஆய - கூரியஅறிவைத்தருவனவாகிய, பொருள் இல்லை - வேறுபொருளில்லை. கொண்டான் இல் (தம்மை) கொண்ட சொழுநனைப்போல, துன்னிய - பொருந்திய, கேளிர் - உறவினா, பிறர்இல்லை (பெண்களுக்கு) வேறொருவரில்லை, ஈன்றுள்இன் (தன்னை) பெறறுள் போன்ற, கடவுள்உம் - தெய்வமும், என்ன- எத்தன்மையுள்ள தெய்வங்களுள்ளும், இல் (ஒருவனுக்கு) இல்லை.

உறுப்பு, பொருள், கேளிர், கடவுள் எ. இல்லை இல் ப. இல், இன் ஒப்புப் பொருளில்வநத ஐந்தாம் உருபுகள். கேளிர் பலர்பாற் படர்க்கைப் பெயர்ச்சொல் கேள்பகுதி, இர் பலர் பால்விகுதி. கடவுள் கடத்தல் இது இயல்பாகவே பாசங்களி னின்று கடத்தலைஉடையான்மேல்நிற்றலால் தொழிலா

குபெயர். துன்னிய இறந்தகாலப்பெயரெச்சம் துன் பகுதி, கடைக்குறையாய் நின்ற இன் இறந்தகால விடைநிலை, னகரமும் யகரமும் தோன்றல் சந்தி, அ எச்சவிகுதி. உம்மை உயர்வு சிறப்பு. (கள௩)

174 நாள்உம் - நட்சத்திரமும், இருசுடர்உம் - சந்திர சூரியர்களும், என்றுஉம் - எக்காலத்தும், உளஆரும் - உள்ளனவாம், பிணிஉம் - பிணிவரு நாள்களும், தொழில் உம் (உழவுமுதலிய) தொழில்களும், என்றுஉம் - எப்பொழுதும், ஒக்கும் (தம்முள்) ஒக்கும், கொடுப்பார்உம் (இரப்பவர்க்கு ஒருபொருளை) கொடுப்பவரும், கொள்வார்உம் - ஏற்பவரும், என்றுஉம் - எக்காலத்தும், அன்னா - அத்தன்மையர், பிறப்பார்உம் - பிறப்பவரும், சாவார்உம் - இறப்பவரும், என்றுஉம் - எக்காலத்தும், உளர் (அத்தன்மையராய்) உளராவர்.

உழவுமுதலிய தொழில்கள் உழவு, தொழில், வரைவு, வாணிபம், விச்சை, சிற்பம் என ஆறு. அன்னர் பலர்பாற படர்க்கைக் குறிப்புவினைமுற்று அன்உவமவுருபிடைச்சொல் லடியாகப்பிறந்த பகுதி, ன் சந்தி, அர்விகுதி. (களச)

175. பழிஅன்மை (ஒருவன்) பழிபடவாழா திருத்தல், மக்களால் (அவனது) மக்கட்பெறுகையால், காண்க - அறியக்கடவர், ஒருவன் கெழுஇன்மை - ஒருவன் (பிறரோடு) நட்பில்லாதிருத்தல், கேடுஆல் (அவனுக்குவரும்) தீங்கால், அறிக - அறியக்கடவர், பொருளின் நிகழ்ச்சிஆன் - பொருள் வருகையால், ஆக்கம் (ஒருவனது) செல்வத்தை, அறிக-அறியக்கடவர், புகழ்சசிஆயில (ஒருவன்) புகழ்பட வாழ்வானாயில், போற்றுதார் - பகைவராலும், போறறப்படும்-புகழப்படுவான்.

பழியின்மை, கெழியின்மை எனவும் பாடம். ஒருவர் ஏதோ எ. காண்க, அறிக, போற்றப்படும் ப. செழுமுதனிலைத தொழிற்பெயர். ஆயில் ஆல் இடைக்குறை. போற்றுதார் போற்றப்படும் வினைமுதற பொருளில்வந்த மூன்றும்வேற றுமைத தொகை நிலைத்தொடர். அதனிறுதியில் இறந்தது தழுவிய எச்சவும்மை தொகுத்தல். (கஎரு)

176. உழுவை - புலி, ஊன் உண்டு - தசையையுண்ணுத லால், நிறம் பெறும் - நிறம்பெற்று விளங்கும், காலேயம் - பசுக்கூட்டம், நீர் நிலத்து - நீர் தோய்நத நிலததில் (எழுந்த) புல்இன்ஆல் - புல்லால், இன்பு உறும் - மகிழ்ச்சியடையும், (அதுபோல) கீழ் எல்லாம் - கீழ்மக்கள் யாவரும், நெல் இன் அரிசி ஆன் - நெல்லரிசியினாலாகிய வுணவால், இன்பு உறும் - இன்பம்அடைவர், மேல் - மேன்மக்கள், தத்தம் — தங்கள் தங்களுககுரிய, வரிசை ஆன் - மேம்பாடுள்ள செய்கையால், இன்பு உறும் - இன்பம் அடைவர்.

உழுவை, காலேயம், கீழ், மேல் எ. உறும் ப. இன்புசெ. உண்டு காரணப்பொருளில்வந்த இறநதகால வினையெச்சம். கீழ் எல்லாம் சொல்லால் அஃறிணையாதலால் உறும் என்னும் பொதுவினை கொண்டது. அளபெடை இன்னிசை நிறைதத லில் வந்தது. (கஎசு)

177. கைத்துஉண்டா - கைப்பொருளுண்டாகி, காவார் இன் (அதனைத்தென்புலத்தார்முதலியோர்க்குப் பகுத்துண்டு) பாதுகாவாதவரினும், கைத்துஇலர் நல்லர் - அக்கைப்பொரு ளில்லாதவர் நல்லவர், வைத்தார் இன் (தாமும்அனுபவியாது சேமஞ்செய்து) வைத்து இழப்பவரினும், வறியவர் - வறு

மையையுடையவர், நல்லர் - நல்லவர், பைத்து எழுந்து - கோபித்தெழுந்து, வைதார் இன் - வைதவரினும், பொறுப்ப வர்-பொறுப்போர், நல்லர்-நல்லவர், செய்தார் இன் (நன்றி) செய்தவரினும், சிதையாதவர் (அந்நன்றியை) மறவாதவர், நல்லா - நல்லவராவார்.

கைத்திலர் நல்லர் கைத்துண்டாகிக் காப்பாரின்எனவும் பாடம். கைத்திலர், வறியவர், பொறுப்பவர், சிதையாதவா எ. நல்லர் ப, உண்டா என்னும் கூட்டுவினைப் பகுதி வினை யெச்சப் பொருள்மேல் நின்றது. இன் உருபுகள் உயர்வு குறித்தலில்வந்த எல்லைப் பொருளன. இழிவுசிறப் பும்மை கள் காவாரின் முதலியவற்றி னிறுதியில் தொக்குநின்றன. பைத்து இறந்தகால வினையெச்சம் பை பகுதி. (கஎஎ)

178. தந்தை நலத்தை - தகப்பனது நன்மையை, மகன் - புத்திரனது (நற்குணமே) உரைக்கும் (பிறர்க்கு) அறிவிக் கும், உள்நின்ற - மனத்திலுள்ள, வேட்கை - விருப்பத்தை, ஒருவன்முகன் - ஒருவனதுமுகமே, உரைக்கும்-அறிவிக்கும், அகல்நீர்-அகன்றதன்மையையுடைய,பிலத்துஇயல்பு - பாதா ளத்தின் தன்மையை, புக்கான் (அதனுள்)புகுந்தவன், உரை க்கும் - அறிவிப்பான் (அதுபோல) நிலத்து இயல்பு - உலகி லுள்ள மககளது தன்மையை, வானம் - மழை, உரைத்து விடும் (பெய்தும் பெய்யாதும்) அறிவிக்கும்.

மகன், முகன், புக்கான், வானம் எ. உரைக்கும், உரை த்துவிடும் ப. முகம்முகன இறுதி நிலைப்போலி. வேட்கை தொழிற்பெயர் வேள பகுதி; ளகரம் டகரம் ஆகத்திரிதல் சநதி, கை விகுதி. நிலம் இடவாகுபெயர். (கஎஅ)

**179.** புலவர் - கல்வி யறிவுடையோர், தேவர் அனையர்- தேவரோடொப்பர், ஓர்ஊர்உறைவோர் (அவர்வாழும்) ஒரு ஊரினில்வாழ்வோர், தேவர் தமர் அனையர் - தேவரதுஉறவினரோ டொப்பாவார், பேணி (அப்புலவரை) விரும்பி, வழிபடுவோர் - தொண்டுபட்டு நடப்பவர், தமர்உள் (அத்தேவரது) உறவினருள் (ஒருவராகவைக்கப்பட்டு) பெற்றார் அன்னா (அத்தேவரால் அருள்) பெற்றவரோடும் ஒப்பர், கற்றாரை-அக்கல்வியறிவுடையவரை, காதலவர்-விரும்பி யுபசரிப்பவர், கற்றார் அன்னர்-கற்றவரோடு ஒப்பாவார்.

கல்வியறிவுடையவர் யாவராலும்வணங்கப்படும் பெருமையையுடையர் என்பதுகருத்து. புலவர், உறைவார், வழிபடுவார், காதலவர் எ. அனையர், அன்னர் ப. பெற்றார் அன்னர், கற்றார் அன்னர் தொகுத்தல்விகாரம். தேவரனையர் முதலிய தொடர்கள் உவமைப் பொருளில்வந்த மூன்றாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்கள். காதலவர் செயப்படுபொருள் குன்றாத குறிப்பு வினையாலணையும்பெயர் - உம்மை யிரண்டும் அசைநிலைகள். (கஎகூ)

**180.** பிறந்த உயிர்எல்லாம் - பிறந்த உயிர்களெல்லாவற்றுள்ளும், சாவாத - இறவாதவுயிர்கள், இல்லை - இல்லையாம், வலிகள்உம்-வன்மைகளுள்ளும், தாவாத - கெடாதவன்மைகள், இல்லை - இல்லையாம், மூவாத-மூத்துக்கெடாத, இளமை இசைந்தார் உம - இளமையைப் பெற்றவரும், இல்லை-இல்லையாம், வளமைஇல் - செல்வத்தில், கேடுஇன்றி (இடையில்) அழிவில்லாமல், சென்றார் உம் (தாம்உள்ளஅளவு) போயினாரும், இல்லை - இல்லையாம்.

சரீரம், இளமை, செல்வம் இவைகள் நிலைபெறமாட்டா என்பதுகருத்து. சாவாத, தாவாத, இசைநதார், சென்றார் எ. இல்லை ப. சாவாத,தாவாத அஃறிணைப்பலவின்பாற்படர்க் கையெதிர்மறைவினையாலணையும்பெயர்கள்.தாபகுதி,வ்சந்தி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒரு பகுதி, அ சாரியை, உகரக்கேடு சந்தி, அ பலவின்பால்விகுதி. மூவாத என்னும் எதிர்மறைப்பெயரொச்சத்தின் ஈறுதொக்கது. மூ பகுதி. உமமை மூன்றனுள் முன்னது உயர்வுசிறப்பு. பின்னுள்ளஇரண்டும இறந்தது தழுவிய எச்சப்பொருளன. (சஅ0.

181. கொடுப்பின் (ஒருவனுக்கு) கொடுப்பானானல், அசனம் - உணவை, கொடுக்க - கொடுக்கக்கடவன, விடுப்பின (ஒன்றனை) நீக்குவானானல், உயிர்-ஓருயிர்க்கு, இடையிட்ட- (வந்த) இடையூறுள்ளனவற்றை, விடுக்க - நீக்கக்கடவன, எடுப்பின் - தாங்குவானாயின், கிளைஉள் (தன்) உறவினருள், கழிந்தார் - தளர்ந்தவரை, எடுக்க - தாங்கக்கடவன், கெடுப்பின்(ஒன்றனை) கெடுப்பானானல், வெகுளி (தன் மனத்தில் எழும்) கோபத்தை, கெடுத்துவிடல்-கெடுக்கக்கடவன்.

ஒருவன் தோ - எ. சொடுக்க, விடுக்க, எடுக்க, கெடுதது விடல் ப. கெடுத்துவிடல் துணிவுப் பொருளில்வந்த வியங்கோள் வினைமுற்று கெடுபகுதி, த் சநதி, து சாரியை, விடு துணிவுப் பொருளில்வந்தவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, உகரக்கேடு சந்தி, அல்வியங்கோள் வினைமுற்று விகுதி. (கஅக)

182. கல்லார்க்குஉம் (நூல்களை) கற்காதவர்க்கும், தம் ஊர்என்று - தமது ஊரொன்று, ஊர் இல்லை (ஒரு) ஊரும் இல்லை. நல்நெறி - நல்லொழுக்கவழியில், செல்வார்க்குஉம்-

செல்லும் தவசிகளுக்கும், தம் ஊர்என்று - தமது ஊரொன்று, ஊர் இல்லை (ஒரு) ஊரும் இல்லை, அல்லாத (நல்லநெறியிற்செல்லாத) கடை கட்குஉம் - கீழ்மக்களுக்கும், தம் ஊர் என்று - தமது ஊரொன்று, ஊர்இல்லை (ஒரு) ஊரும்இல்லை, தம்கைத்து உடையார்க்குஉம்-தமது கையில் பொருள்உடையவர்க்கும், எ ஊர் உம்-எந்தவூரும், ஊர் (தமது) ஊராகவே பயன்படும்.

கல்லார், கடையாயார் இவர்கட்குத் தாமிருக்கும் ஊரும் தமக்கு உரிமையில்லாமையாலும், தவசிகளுக்கு எந்த ஊரிலும் விருப்பு வெறுப்பில்லாமையாலும் தமதூரொன்றாரில்லை என்றார். ஊர் எ. இலலை ப. எவ்வூர் எ. ஊர்ப. கடை கடையானென் மேல் நிற்றலால் பண்பாகுபெயர். கல்லார், கடைகள் இவற்றினிறுதியில் நின்ற உம்மைகள் இழிவுசிறப்புப்பொருளன. நன்னெறிச்செல்வார். கைத்துடையார் இறுதியில் நின்ற உம்மைகள் உயர்வுசிறப்புபபொருளன.(கஅஉ)

183. மெல்லிய - மிருதுவாகிய, வாழைக்கு - வாழைமரத்திற்கு, தான்ஈன்ற - தான்பெற்ற, காய் - காயே, கூற்றம் - இயமனும் (அதுபோல) கல்லாத (நூல்களை) கற்காத, ஒருவர்க்கு - ஒருவருக்கு, தம்வாய் இல் - அவரது வாயிலுள்ள, சொல் - சொல்லே, கூற்றம் - இயமனும், அல்லவை - பாவச்செயல்களை, செய்வார்க்கு - செய்கிறவர்க்கு, அறம் - தருமக்கடவுளே, கூற்றம் - இயமனும், இல் இருந்து (கொண்டவன்) மனையிலிருந்து, தீங்கு-தீயவழியில், ஒழுகுவாள்-நடப்பவள்,கூற்றம் (அதகொண்டவனுக்கு) இயமனும்.

காய், சொல், அறம், தீங்கொழுகுவாள் எ. கூற்றம் ப. அல்லவை எதிர்மறைப் பண்படியாகப்பிறந்த பலவின்பாற்

படர்க்கைக்குறிப்பு வினையாலணையம்பெயர் அன்மை பகுதி, ஈறுகெடுதலும் லகரந்தோற்றமும் சந்தி, அசாரியை, வை பலவின்பால்விகுதி. காய் முதலியவற்றின் இறுதியில் தேற்ற ஏகாரந்தொகுத்தல். (கஅங)

**184.** கடிய - கடுந்துன்பங்கள், வருதல் ஆல் - வருகையால், கள்ளாமை வேண்டும் (பிறபொருளை) களவு செய்யாமை வேண்டும், தகுதி உடையன (தனக்கு) தகுதியையுடைய நல்லொழுக்கங்களை, தள்ளாமைவேண்டும் (ஒருவன்) நீக்காதிருத்தல் வேண்டும், சிறியா ஒடு (அறிவில்) சிறியாரோடு, நள்ளாமைவேண்டும் (ஒருவன்) நட்புக்கொள்ளாதிருத்தல்வேண்டும், யார்மாடு உம் - யாவரிடத்தும், பகை-பகையை, கொள்ளாமை வேண்டும் (ஒருவன்) கொள்ளாதிருத்தல் வேண்டும்.

ஒருவன் தோ எ. கள்ளாமை வேண்டும், தள்ளாமை வேண்டும், நள்ளாமை வேண்டும், கொள்ளாமை வேண்டும் ப. கள்ளாமை முதலியன எதிர்மறைத் தொழிற் பெயர்கள். கள் பகுதி, ளகரமெய் சந்தி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒருபகுதி, மைவிகுதி. நள்பகுதி. கடிய பண்படியாகப் பிறந்த குறிப்புவினையாலணையும்பெயர் கடிபகுதி, யகரமெய் சந்தி, அ பலவின்பால் விகுதி. (கஅச)

**185.** இளமை பருவத்து - இளமைக்காலத்தில், கல்லாமை (நூல்களை) கற்காதொழிதல், குற்றம் - குற்றமாம், வளம் இலாத - வருவா யில்லாத, போழ்தத்து - காலத்தில், வள்ளன்மை (பிறர்க்கு) உபகரிக்குந் தன்மை, குற்றம் - குற்றமாம், கிளைஞர் - சுற்றத்தார், இல்பொழுது இல் - இல்லாத

காலத்தில், சினம் (பிறரோடு) கோபித்தல், குற்றம் - குற்றமாம், தமர் அல்லார் - உறவினரல்லாதவரது, இல் அகத்து - வீட்டினிடத்து, ஊண் - உண்ணுதல், குற்றம் - குற்றமாம்.

கல்லாமை, வள்ளன்மை, சினம் ஊண் எ. குற்றம் ப. பொழுதத்து பொழுது அத்து எனப்பிரித்து அத்துஎனபதைச் சாரியையாகக்கொள்க. (௧அரு)

186. எல்லா இடத்து உம் (குணம்குற்றம் தெரியாது) யாவரிடத்திலும், கொடை - கொடுத்தல், தீது - கெட்டது, மக்களை (தமது) புத்திரரை, கல்லாமல் (நூல்களை) கற்காமல், வளரவிடல் (ஒருவனை) வளரவிடுதல், தீது - கெட்டது, நல்லார் - பெண்கள், நாண் அற்று - நாணழிந்து, நிறயில் - நிற்பார்ஆயின், நலம் (அவர்) அழகு, தீது - கெட்டது, கொள்கை (தன்குலத்துக்குத்தக்க) ஒழுக்கம், அழிந்தக்கடை - அழிந்தால், குலம் - (அவன்பிறந்த) குடிப்பிறப்பு, தீது - குற்றமாய் முடியும்.

எல்லாவிடத்துங் கொடைதீது எனவும்பாடம். கொடை, வளரவிடல், நலம், குலம் எ. தீது ப. கொடை தொழிற்பெயர் கொடு பகுதி, உகரக்கேடுசந்தி, ஐ விகுதி. அழிந்தக்கடைவினையெச்சம் அழி பகுதி, து அ இரண்டுஞ் சாரியைகள், நகரம் ககரம் தோற்றமும், உகரங் கெடுதலும் சந்தி, கடை எச்சவிகுதி, இவ்வெச்சவிகுதி நிகழ்காலததின் மேல் நின்றது. உம்மைமுற்று. தீது ஒன்றன்பாற்படர்க்கைக்குறிப்புவினைமுற்று தீமை பகுதி, ஈறுகெடுதல் சந்தி, து விகுதி. ()

187. மணி - இரத்தினம், மாசுபடின் உம் - அழுக்கடைந்தாலும், தன்சீர் - தனது சீரின்று, குன்று - குறையா,

(அதுபோலப் பெரியோர் வறுமைவந்தால் தமது தன்மையி னின்றுங்குறையார்) பூசிக்கொளினஉம் - தேய்த்துக்கொண்டாலும், இரும்பின்கண் - இரும்பினிடத்து, மாசுஓடும்-அழுக்கடையும் (அதுபோல) பாசத்துள் இட்டு - விலங்கிலிட்டு (தண்டித்து) விளக்கின்உம் - அறிவு மூட்டினாலும், கீழ்-கீழ் மகன், தன்னை மாசுஉடைமை - தன்னைக் கீழ்மை யுடையவனாகவே, காட்டிவிடும் - காண்பிப்பான்.

சீர், மாசு, கீழ் எ. குன்று, ஓடும், காட்டிவிடும் ப. குன்று பலவின்பாற படர்க்கை எதிர்மறை வினைமுற்று. குன்று பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ எதிர்மறைப் பலவின்பால் விகுதி, விளக்கின் எதிர்காலப் பிறவினை வினையெச்சம் விளக்கு பிறவினைபகுதி, உகரக்கேடுசந்தி, இன்எச்சவிகுதி. உம்மை மூன்றும் உயர்வு சிறப்புப்பொருளன. (கஅா)

188. எல்லாம் அறிவான் - எல்லாப்பொருளையும் அறிந்த ஒருவனும், யாது ஒன்றுஉம் - யாதொரு பொருளையும், அறியாதவன் ஒருவனஉம் - அறியாத வொருவனும், குணன் அடங்க - குணங்குறைவுபட, குற்றம் உளான் ஒருவன்உம் (மிகவும்) குற்றமுள்ள ஒருவனும், கணன் அடங்க - சிறுமை குறைபட, கற்றான் ஒருவன் உம், கறற ஒருவனும், இல்-(உலகத்தில்) இல்லை.

அறிவான், அறியாதவன், குற்றமுளான், கற்றான் எ. இல் ப. குணன் கணன் இறுதிநிலைப்போலி. அறிவான், அறியாதவன், குற்றமுளான், கற்றான் இவ்வினைமுற்றுகள் பெயரெச்சம் ஆயின. உம்மைபொருத்தமில் புணர்ச்சி. (கஅஅ)

---

கோடாத (ஒருபக்கத்துச்) சாயாத, மொழி-ஓரம் சொல்லாத வார்த்தை, வனப்பு - அழகாம் - கோறகு (அரசரது) செங்கோலுக்கும்,அது ஏ-அக்கோடாமொழியேயழகாம், சேவகர் களு-வீரர்களுக்கு, வாடாத-குறைவுபடாத,வன்கண் - போர் முகத்து அஞ்சாமை, வனப்பு-அழகாம்.

யானை, நுண்மை, கோடாமொழி, வன்கண் எ. வனப்பு ப. கோடா ஈறுதொக்க பெயரெச்சம். கோறகு என்பதனை இறுதியில் இறந்தது தழுவிய எச்சவும்மை தொகுத்தல். ஏ அசை. (கக0)

191. கண்ணோட்டம (பிறர்மேல்) தாட்சிணியஞ் செலுத்தல், கண்வனப்பு - கண்களுக்கு அழகாம், செல்லாமை (பிறரிடத்து இரத்தற்கு)போகாதிருத்தல், காலவனப்பு-காலுக்கு அழகாம், இத்துணையாம் என்று உரைத்தல் - இவ்வளவினது என்னதென்று அளவிட்டு சொல்லுதல், எண் வனப்பு-ஆலோசனைக்கு அழகாம, கேட்டார் நன்று என்றல் - கேட்பவரினியதென்று சொல்லுதல், பண் (பாடும்) இசைக்கு.வனபபு-அழகாம், தன் நாடு - தனது நாட்டினை, வாட்டான் - வருத்தானாகி, நனறு - நன்மை(செய்கிறான)என்றல்-என்றுசொல்லுதல், கிளர் (சேனைகளால்) விளங்கும், வேந்தன் - அரசனுக்கு, வனபபு-அழகாம்.

கண்ணோட்டம், செல்லாமை, உரைத்தல், என்றல் எ. வனப்பு ப. கணவனபபு, கால்வனப்பு, எண்வனப்பு, பண வனபபு, வேநதனவனப்பு தகுதிப்பொருளில் வந்த நானகாம வேறறுமைத்தொகை நிலைத்தொடாகள். வாட்டான எனறும் எதிர்மறைப்பிறவினை வினைமுற்று நனறு என்னுங் குறிப்புவினைமுற்றைக் கொள்ளுதலால எச்சம் ஆயிற்று. ()

192. சிலம்பிக்கு - சிலம்பிப் பூச்சிக்கு, தன்சினை - அதனது முட்டை, கூற்றம் - (மரணத்தைத் தருதலால்) யமனாம், விலங்கிற்கு - மிருகத்திற்கு, நீள் கோடு - அளவிற்குமேற்பட்ட கொம்பு, கூற்றம் (துன்பஞ்செய்தலால்) யமனாம், வலம் படாத - வெற்றியில்லாத, மாவிற்கு - கவரிமானுக்கு, மயிர் (அதனது) மயிர், கூற்றம் ஆம் (மரணத்தைத்தருதலால்) யமனாம், ஞெண்டிற்கு - நண்டினுக்கு, தன் பார்ப்பு (அதனது) பிள்ளை, கூற்றம் (மரணத்தைத்தருதலால்) யமனாம், நாவிற்கு (ஒருவனுடைய) நாக்குக்கு, நன்று அல் - (பிறர்க்கு) நன்மையைத்தராத, வசை - பழிசொல்லுதல், கூற்றம் (துன்பத்தைத் தருதலால்) யமனாம்.

தன்மயிர்க்குக் குறைவுவந்தவிடத்தில் கவரிமான் உயிரிழத்தலால் மயிர்கூற்றம் என்றார். சினை, கோடு, மயிர், பார்ப்பு, வசை எ. கூற்றம் ப. குவ்வுருபுகள் பகைதொடர் பொருளில்வந்தன. வலம்படா ஈறுதொக்க எதிர்மறை வினைப்பெயரெச்சம். நீள்கோடு வினைத்தொகை நிலைத்தொடர். (௧௯௨)

193. நாண் இலான் (பழிச்செயலுக்கு) நாணுதலில்லாதவனது, சால்பு உம் - அமைதியும், நடை இலான் - நல்லொழுக்கமில்லாதவன் (கொண்ட) நல்நோன்பு உம் - நல்லவிரதமும், ஊண் இலான் (தனக்கு) உண்ணும் பொருளில்லாதவன், செய்யும் - கொடுக்கும், உதாரத்தை உம் - கொடையும், ஏண் இலான் - வலிமையில்லாதவன், சேவகம் உம் - வீரமும், செந்தமிழ் தேற்றான் - செந்தமிழியல்பை யறியாதவன், கவி செயல் உம் - பாடலைச்செய்தலும் (ஆகிய) இவ்வைந்தும், நா அகம் - நாக்கினிடத்தால், நாடின் - ஆராயின், நகை - நகைக்கப்படுஞ் செயல்களாம்.

அறிதற்குமனம் இடம் ஆயினும் வினையறியவேண்டு, லால் நாவகமே நாடின் என்றார். ஐந்து தோ எ. நகை ப. தேறுன் எதிர்மறைத் தன்வினை வினையாலணையும் பெயர் தேறு பகுதி, நகரமெய் விரித்தல் விகாரம், உகரக்கேடுசந்தி. ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, ஆர் பலர்பால் விகுதி, விகுதியின் ஆமுதற்குறை. ஏ அசைநிலை. (கசுங)

194. பெருங்குணத்தார் - நிறைந்த நற்குண முடைய வரை, சேர்மின - அடையுங்கள், பிறன்பொருள் - பிற னது பொருளை, வவ்வன்மின் - அபகரியா திருங்கள், கருங்குணத்தார் - இழிகுணத்தவரது, கேண்மை - சிநேகத தை, கழிமின் - விடுங்கள், ஒருங்குஉணர்ந்து (வருங்கெடு திகளை) ஒருசேரஅறிந்து, தீச்சொல் - கடுஞ் சொற்களைச் சொல்லாது, காமின் - பாதுகாவுங்கள், வரும்காலன் - வரு கின்ற காலனது (வருகை) திண்ணிது ஏ-உண்மையே, வாயச் சொல் ஏ அன்று (நாம்சொல்லும்) வாய்ச்சொல் மாத்திரை யேயல்ல, வழக்கு - உலகவழக்கும் (இதுவே).

நீர் தோ எ. சேர்மின், வவ்வன்மின், கழிமின், காமின ப. வருகை தோ எ. திண்ணிது ப. வவ்வன்மின் முன்னி லைபன்மை யெதிர்மறையேவல் வினைமுற்று வவ்பகுதி, அல எதிர்மறைவிகுதி, வகரத்தோற்றம் சந்தி, அனைத்தும ஒரு பகுதி, லகரம் னகரமாகத் திரிதல் சந்தி, மின் ஏவல்விகுதி. மற்றையவை உடன்பாட்டேவல் வினைமுற்றுகள். கருமை இழிவின்மேல் நின்றது. ஏ இரண்டும் தேற்றப் பொருளன. பெருங்குணத் தார்ச்சேர்மின் இரண்டாம் வேற்றுமைத தொகை யாதலால் வருமொழி வல்லெழுத்து மிகுந்தது. ()

195. மயிர் வனப்பு உம் - சிகையினால் வரும் அழகும், கண்வனப்பு உம் - கண்களின் அழகும், மார்பின் வனப்பு உம் - மார்பினால் வரும் அழகும், உகிர் வனப்பு உம் - நகத்தால்வரும் அழகும், காது இன் வனப்பு உம்-காதினால்வரும் அழகும், செயிர்தீர்ந்த-குற்றத்தினின்று நீங்கிய, பல்லின் வனப்பு உம் - பல்லினால்வரும் அழகும், வனப்பு அல்ல - (ஒருவனுக்கு) அழகல்ல, நூற்கு - நூல்களுக்கு, இயைந்த-பொருந்திய, சொல்லின் வனப்பு ஏ-உரையினது அழகே, வனப்பு - அழகாம்.

வனப்பு எ. வனப்பல்ல ப. வனப்பு எ. வனப்பு ப. மயிர் வனப்புமுதலியதொடர்கள் ஏதுபொருளில்வந்த மூன்றாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர்கள். செயிர்தீர்ந்த நீக்கபொருளில்வந்த ஐந்தாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். இயைந்த இறந்தகாலப் பெயரெச்சம் இயை பகுதி, ந் சந்தி, த் இடைநிலை, அ எச்சவிகுதி. ஏ பிரிநிலை. (கக௫)

196. வார் சான்ற (மிகவும்) நீண்டமைந்த, கூந்தல்-கூந்தலையுடையாய், வரம்புஉயர (வயலினது) வரம்புஉயர, வைகல்உம் - எப்பொழுதும், நீர்சான்றுஉயர ஏ - நீர்நிறைந்துயரவே, நெல்உயரும்-நெற்பயிர் உயராநிற்கும் (அதனால்) சீர்சான்ற - சிறப்பமைந்த, தாவாதகுடிஉயர - கெடாதகுடியுயரவே, தாங்குஅரும் (பகைவரால்) தாங்குதற்கு அரிய, சீர் - சிறப்பையுடைய, கோ - அரசன், உயர்தல் (படைமுதலியவற்றால்) உயரக்கடவன் (என்று) உலகு - உலகமானது, ஓவாது - ஒழியாமல், உரைக்கும் - சொல்லாநிற்கும்.

குடிகளின் உயர்ச்சியால் அரசன் உயர்வான் என்பது கருத்து. உலகு எ. உரைக்கும் ப. கூந்தல் "இலைநட்டுவாழ்

வான்" என்பதுபோல முதல்மேல் நிற்றலால் சினையாகு பெயர். இது அண்மைவிளி. சான்ற உரிச்சொல்லடியாகப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம் சால்பகுதி, லகரம் னகர மாகத்திரிதல் சந்தி, ற் இடைநிலை, அ எச்சவிகுதி. சான்று இறந்தகால வினையெச்சம். உயர்தல் வியங்கோள் வினைமுற்று உயர்பகுதி, து சாரியை, உகரக்கெடுசந்தி, அல் வியங்கோள் விகுதி. தாவா ஈறுதொக்க எதிர்மறைப் பெயரெச்சம் தா பகுதி. ஓவாது எதிர்மறை வினையெச்சம் ஓவுபகுதி. உம்மை முற்று. (ககூசு)

197. எதவம்உம் - யாதொருதவத்தையும், அழியாமை - அழிக்கா திருக்கக்கடவன், சார்ந்தாரை (தம்மை) அடைந்த வரை, ஆக்கல் - விருத்திசெய்யக்கடவன், பழியாமை (பிறர்) பழிக்காமலும், யார்மாட்டும் - யாவரிடத்தும், ஒளியாமை - ஒளிக்காமலும், பாத்தல் - பகுத்துண்ணக் கடவன், கன்று சாவ - கன்றுசாவாநிற்க, பால் கறவாமை - பால்கறவா திருக்கக்கடவன, மன்றுசார்வு ஆக - பொதுத்தலத்தி னருகாக, மனை - வீடு (கட்டுதலும்) செய்யற்க - செய்யா திருக்கக் கடவன்.

ஒருவன் தோ எ. அழியாமை, ஆக்கல், பாத்தல், கறவாமை, செய்யற்க ப. பழியாமை, ஒளியாமை எதிர்மறை வினையெச்சங்கள். அவற்றின் எச்சவிகுதி மை. அழியாமை, கறவாமை, செய்யற்க விதித்தல் பொருளில் எதிர்மறையில வந்த வியங்கோள் வினைமுற்றுகள் அழி பகுதி, ய் சந்தி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒரு பகுதி, ம் விரிதல், ஐ வியங்கோள் விகுதி. செய்யற்க செய்பகுதி, ய் சந்தி, அல

எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, ல் ற ஆகத்திரிந்த சந்தி, க வியங்கோள்விகுதி. ஆக்கல் பாகுதல் உடன்பாட்டலவாகத வியங்கோள் வினைமுற்றுகள் பாபகுதி, த்விரிந்தல, து சந்தி, அல் வியங்கோள்விகுதி. பகுதியெனினும் பகுதி ஈறுகெட்டு முதனீண்டுநின்றது; ஆக்குபகுதி. (௧௯௭)

198. பொச்சாப்பு (கற்றதை) மறத்தல், கேடு (ஒருவனுக்கு) கெடுதியாம், பொருள்-செல்வமிகுதியால், செருக்கு (ஒருவன்கொள்ளும்) இறுமாப்பு, கேடு - கெடுதியாம், முற்றாமை (தான்மேற்கொண்ட தொழிலை) முடிக்காது விடுதல், கேடு-கெடுதியாம், முரண் (பிறரிடத்து) பகை கொள்ளுதல், கேடு - கெடுதியாம், தெற்ற - தெளிவுபெற, தொழிலமைவொடு (தனக்கு) தொழில்செய்வானோடு, மாற்றாயின் - பகைகொளவானானால் (அப்பகை) உழுமகற்கு - உழவினால் வாழ்வோனுக்கு, என்றும்-எப்பொழுதும், கேடென்று-கெடுதியாமென்று, உரை (நீ) சொல்லு.

நீ தோ எ. உரை ப. பொச்சாப்பு தொழிற்பெயர் பொச்சா பகுதி, ப் சந்தி, பு விகுதி. முற்றாமை எதிர்மறைத் தொழிற்பெயர் முற்று பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, மை விகுதி. உடன்பாட்டில்வரில் இடைநிலை பெற்று முற்றினமை, முற்றுகின்றமை எனவரும். கேடு முதனிலை திரிந்த தொழிற்பெயர் கெடு பகுதி. (௧௯௮)

196. கற்றான்-கற்றுவல்லவன், பொன்பெறும்-பொருளையடைவான, நல்கவி-இனியபாடல்செய்யவல்லவன், பொருள் பெறும் (அரசனாலே) எல்லாப்பொருளையும் அடைவான,

யாதி - வாதம்பேசுவோன், என்பெறும் - யாதுபெறுவானா (னானுல்) இசை பெறும் (வென்றானென்று) புகழைப்பெறு வான, முன் - இளமைப்பருவத்தே, பெற (நன்மையை) அடைய, கல்லார் (நூல்களை) சற்காதவரும், கற்றோர் இனத்து - சேறுர் வல்லோரினத்தோடு, அல்லார (கூடுதல்) இல்லாத வரும், நல்லார் இனத்து - நல்லவர்கூட்டத்தின (நடுவே) நகை பெறுப - இகழ்ச்சியை யடைவார்.

கற்றான், கவி, வாதி எ. பெறுப ப. கல்லார், அல்லார் எ. பெறுப ப. நகைதொழிற்பெயர் நகுபகுதி, உகரகெடுச்சந்தி, ஐ தொழிற்பெயர்விகுதி. பெறுப பலர்பாற்படர்க்கைவினை முற்று பெறு பகுதி, ப பலர்பால்விகுதி. இது எதிர்காலத் தன்மேல்நின்றது. ஏழ்றபொருளில்வந்த ஏ இனத்து என் பதனேடுபொருத்தமில் புணர்ச்சியாய் நின்றது. (கசுகூ)

200. நல்லவெளிப்படுத்து (பிறர்தனக்குச்செய்த) நன்மை களைப்பலரறியச்செய்து, தீய (அவர்செய்த) தீயகாரியங்களை, மறந்து ஒழிந்து - நினையா தொழிந்து, உயிர்க்கு (பிற) உயிர்களுக்கு (இடையூறுவந்தால்) ஒல்லை-விரைந்து, ஊற்றுக் கோல் ஆகி - ஊன்றுகோல்போலுதவி, ஒல்லும் ஏல்-கூடும் ஆனால், பிறர் பொருள்கண் - பிறரதுபொருளிடத்து, மாயம் மாற்றுக - வஞ்சனையைத் தவிரக்கடவன, மானத்து ஆன் மானங்காத்தற்பொருட்டு, அழிதல் (உயிர்) விடுகை, ஆயின்- ஆராயுமிடத்து, அறிவு (ஒருவனுக்கு) அறிவாம்.

மாற்றுகமர்னத்தான்எனப்பாடம். ஒருவன்தோ எ. மாற் றுகப.ஒழிதல் எ.அறிவுப.வெளிப்படுத்து, ஒழிந்து, ஆகிஎன னும் வினையெச்சங்கள்தனித்தனியாய் மாற்றுகஎன்னும்வியங்

கோள வினைமுற்றைக் கொண்டன. வெளிப்படுத்து இறந்தகாலப் பிறவினை வினையெச்சம் வெளி என்னும் பெயர்ச்சொல் தன்னை வினைப்படுத்தவரும் படு என்னும்வினைப்பகுதியொடு கூடி யொருசொல் தன்மைப்பட்டுநின்ற வெளிப்படு பகுதி, த் சந்தி, து பிறவினை விகுதி, அது தானும் ஒரு பகுதி, உ சாரியை கெடு சந்தி, உ எச்சவிகுதி. ஆன் உருபு மயக்கம ஊன் படுசொல் ஊற்றுக்கோல் மெல்லெழுத்து வல்லெழுத்தாதல் விகாரம். (உ00)

201. நன்புலத்து உள் - விளை புலத்திலுள்ள, வை - வைக்கோல்களை, அடக்கி (தனக்குரியதாக) திரட்டி, நாள நாள் உம - எப்பொழுதும, ஏர் போற்றி - உழுமாடுகளைப் பாதுகாத்து, புன்புலத்தை - புன்புலங்களை, இன்புலத்த - இனியநன்புலங்களாக, செய்து - திருத்தி, எருபோகிய பின் - எருவை (அவற்றில்) நிறைத்தபின்பு, பணை - செய்கை (அமைந்த) கலப்பை - கலப்பைகளால், இவை - இந்நன் புலங்களில், பால் படுப்பான் - பகுதிப் படுத்தி யுழுவோன, உழுவோன - உழவனுவானென்று, நுண் - நுண்பொருள (அமைந்த) கலபபைநூல் - உழவுநூலை, ஓதுவோர் - கற்றறிந்தவர் (சொல்லுவர்.)

கலப்பை நூலோதுவோர் எ. சொல்லுவர் தோ ப. ஏர் போற்றி எனப்பாடம். முற்றுப்பொருளில் உம்மைபொருத்தமில்புணர்ச்சி. நாள் நாள் பன்மைப்பொருளில்வந்தவடுக்கு. அடக்கிஎன்னும் வினையெச்சம் போற்றி என்னும் எச்சத்தின் முதனிலையையும் அவ்வெச்சம் போக்கிய என்னும் பெயரெச்சத்தின் முதனிலையையும் அவ்வெச்சம் பின் என்னுங்காலப்

பெயராயுங்கொண்டன. என்று என்னும் இடைச்சொல் உழுவோன் என்பதனோடு கூட்டுக. (201)

202. நீர் அறம் - நீர்வார்க்கும் தருமம், நன்று - நல்லது, நிழல (பிராக்கு) நிழல் (தரச்சோலைவைத்தல்) நன்று - நல்லது, தன் இல் உள் - தனது வீட்டில், பார் - (பிரசிருசச) இடம் (கொடுக்கும்) அறம் நன்று - தருமம் நல்லது, பாத்து உண்பன் ஏல் (விருந்தினர்க்கு) பகுத்துண்பானுமாயின், (அவ வண்ணமுடைமையே) சோபெற-ஒழுங்குபெற, நன்று-நல்லது', தளி - கோயிலையும், சாலை-அறச்சாலையையும், நாட்டில- நிலைபெறச் செய்தால்(அச்செய்கைநல்லது இவ்வைந்துஞ் செய்தோர் (க்) பெரும்போகம் - பெரியபோகம், சால - மிகவும், உடன் ஒன்றும - விளைந்துபொருந்தும்.

பாத்துணபனேல் எனப்பாடம். பெரும்போசம் எ. ஒன்றும் ப. சால உரிச்சொல்லடியாகப்பிறந்தவினையெச்சம சால் பகுதி அ எச்ச விகுதி. ஒன்றும் செய்யும் என்னும் பொதுவினைமுற்று. ஒன்று பகுதி. உகேடு சந்தி, உம் முற்று விகுதி. பேரறம் எனவும்பாடம். (202)

203. குளம் தொட்டு - குளத்தைத்தோண்டி, கோடுபதித்து - மரச்சோலைநட்டு. வழிசீத்து - வழிதிருத்தி, உளம், தொட்டு(மேட்டுநிலத்தை)உள்ளேதோண்டி, உழுவயல்ஆக்கி உழும்வயலாகச்செய்து, வளம்தொட்ட-வளம்படத்தோண்டிய, பாகுபடு - வகுப்பாயுள்ள, கிணறோடு - கிணற்றோடு, என்ற - என்று சொல்லப்பட்ட, இவை - இவ்வைந்தும் பால் படுத்தான் - பகுதிப்படச் செய்தவன், சுவர்க்கத்து- சுவர்க்கலோகத்தில், இனிது ஏகும்-இடையூறில்லாமற செல்லுவான்.

பறித்தான் எ. இனிது ப. கோடுமரக்கொம்பு. இந்தச்சினை முதல்மேல் நிற்றலால் சினையாகுபெயர். என்றஇடைச்சொலடியாகப்பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம் என் பகுதி, ற இடைநிலை, அ விகுதி இவ்விகுதிதொகுத்தல். தொட்டு, சீத்து இறந்தகாலவினையெச்சங்கள் தொடு பகுதி, முதனிலையெழுத்தாயத்தோன்றிநின்ற ட் இடைநிலை, உகேடு சந்தி, உ எச்சவிகுதி. சீ பகுதி. உள் இடப்பெயர்ச்சொல், ஆம் பகுதிப் பொருள்விகுதி. (௨௦௩)

204. தான்பிறந்த இல் - தான்பிறந்தகுடிப்பிறப்பினியல்பை, நினைந்து - கருதி, தனை - தன்னை (நல்லொழுக்கத்தினின்று வழுவாதவண்ணம்) கடைப்பிடித்து - மறவாது கொண்டு, தான் - தான், பிறரால் கருதல்பாடு - பிறரால் மதிக்கப்படுஞ் செய்கையை, உணர்ந்து - தெரிந்து, தான் - பிறரால் சாக என - பிறரால் சாகக்கடவனென்றுசொல்ல, வாழான் (நல்லொழுக்கத்தில்) நடவாது, சான்றோர் ஆல் - அறிவால் நிறைந்த பெரியோரால், எந்நாள்உம் - பலநாளும், ஆக என - வாழக்கடவனென, வாழ்தல் (நல்லொழுக்கத்தில்) நடத்தல், நன்று - நல்லது.

வாழ்தல் எ. நன்று ப. கடைப்பிடித்து இறந்தகால வினையெச்சம். கடைப்பிடி பகுதி, த் சந்தி, த் இடைநிலை, உ எச்சவிகுதி. சாக, ஆக வியங்கோள் வினைமுற்றுகள் சா, ஆ பகுதிகள். க வியங்கோள் விகுதி. வாழான் எதிர்மறைவினைமுற்று எச்சமாய் நின்றது. உம்மைமுற்று. (௨௦௪)

205. புண்பட்டார் (போரில்) புண்பட்டவரும், போற்றுவார் (தம்மை) பாதுகாவாதவர், இல்லாதார் - இல்லாதவரும்,

போகுயிர்கள்-உயிர்போநதன்மையையுடையவர்களும், கண் கெட்டார்-குருடரும், கால்இரண்டுஉம் இல்லாதார-முடவர களும் (ஆகியவிவர்கள்) கண்கடை (தங்கள்) கட்பார்வையி டத்தில், பட்டு - எதிர்ப்பட, ஆழ்ந்து - இரங்கி, நெகிழ்ந்து (மனம) உடைந்து, அவர்க்கு-அவர்களுக்கு, ஈந்தார (வேண டியதொனறை) உதவினோர், கடைபோகமகிழ்ந்த-தாமுள்ள அளவுமகிழ்ந்து. வாழ்ந்து கழிவார் — வாழ்ந்துபோவார்.

கண்கண்பட்டு எனவும் பாடம் ஆயில் அவர்கண்களில் அவர்கள்கண்பட எனபபொருளகொள்க. ஈந்தார. வாழ்ந்து கழிவார் ப. பட்டுசெயவெனெச்சத்திரிபு.நெகிழ்ந்து எனனும சினைவினையெச்சம ஈந்தார் என்னும் முதல்வினைகொண்டது. நெகிழ் பகுதி, ந் சந்தி, த் இடைநிலை, உ விகுதி. ஈந்தார இறந்தகால வினைமுற்றுப்பெயர். ஈ பகுதி. (உ0ரு)

**206.** கழிந்தவை (தன்னி னின்று) நீங்கிய பொருள களுக்கு, தான் இரங்கான் - தான்வருந்தாமல், கைவாராத-கைக்குவாராதபொருள்களை, நச்சான்-விருமபாமல், இழிந்த வை (பெரியோர)விலக்கியபொருள்களை,இன்புஉறுன்-விரும பாமல், இல்லார்-வறியோர, மொழிந்தவை (இரந்து) கூறிய பொருள்களை, மென்மொழி ஆல்-மெத்தென்றசொற் சொல் லுதலோடு, உள் நெகிழ்ந்து - மனமுடைந்து, ஈவான் ஒல (ஒருவன்) கொடுப்பானகில், விண்ணோர் ஆல்-தேவர்களால், இன்மொழிஆல் - இன்சொல்லோடு, ஏற்றப்படும்-உயர்த்தப படுவான்.

இகழ்ந்தவை எனப்பாடமாயில் நல்லார விகழப்பட்ட வைஎனப்பொருள்கொள்க. ஏற்றஎனனுந் தந்தொழிலுக்கு

வினையோர் என்னும் மூனுரும்வேற்றுமைவினைமுதலும்,படும் எனனும் தம்மினுகியதொழிலுக்கு ஒருவன் என்னுஞ்செயப்படு பொருள் வினைமுதலும் ஆகக்கொள்க. மென்மொழி ஒன்றும் ஈதல்ஒன்றும் ஆகக்கொள்க. இரங்கான் முதலிய எதிர்மறைவினைமுற்றுகள் எச்சமாய்த் தனித்தனிஈவான்என்னும் வினைமுற்றின் முதனிலைகொண்டன. கைவாரா ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (உ0சு)

207. தோல் கனறு-தோலாற்செய்தகன்றை,காட்டி (பசுவுக்கு)காண்பித்து,கறவாா (பாலை) கறவாதவரும், கறந்தபால், அவ்வாறு கறந்தபாலை, உண்ணுா - உணணுதவரும், பாலபட்டார்-நன்னெறியில் நின்றவரும, பழிபாவம்-பழியையும பாவத்தையும், ஏற்று (தம்) மேறகொண்டு, அயராமல் - சோராமல், இன்பு உற்று(தமதுஉறவினரோடு)மகிழ்கூர்ந்து; வாழ்வன-வாழும் உயிர்களும் (ஆகிய) பால்பட்டார்-இவ்வவகைப்பகுதியா யுள்ளவர்களும, வீடு அழிய (அவர்களுக்குரிய) மோட்சம் நீங்க, கூற்று - யமனுர், கொணர்ந்து (அவர்களை) கொண்டுவந்து, அயர - வருநத, செய்யார்-தணடித்தல் செய்யார்.

பழி ஒன்று, பாவம் ஒன்று ஆகக்கொள்க. கூற்று உயர்திணையியற்பெயர் ஆதலால்செய்யார்எனனும்பலர்பால் வினைமுற்றைக்கொண்டது.மரம்வளர்ந்தன அஃறிணையியற்பெயர் கொண்டுமுடிதலும்காண்க.திணைவிரவிபிகுதியால்உயர்திணைமுடிபேறறது. தோல்கன்றுமூனுரும்உருபும் பயனுந்தொகக வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். கொணர்ந்து இறந்தகாலவினையெச்சம்கொணுபகுதி, ஈறுகுறுகுதலும் ரகரமெய்

சுளை, எண்ணி இருத்தல் - மறவாதிருத்தலாம், பிழைத்தவர் (தமக்கு) தவறுசெய்தலையுடைய, பகைகெடவாழ்வது-பகைமைகெடவாழ்தல், நன்று - நல்லது, பல்பொருள் ஆல்-பலபொருளுதவுதலோடு, பல்லார் - பலரும் (இகழ்ந்து) நகைகெட - நகும அவமதிப்பு நகைகெட, வாழ்வது - வாழ்தல். நன்று-நல்லது.

பெருமை, சிறுமை எ. பொறுத்தல், எண்ணி யிருத்தல் ப. வாழ்வதுஎ. நன்றுப. ஆல்உருபுஉடனிகழ்ச்சிப்பொருட்டு. பிழைத்த அஃறிணைப பலவின்பாற் படர்க்கை இறந்தகால வினைமுற்றுப்பெயர் பிழை பகுதி, த் சந்தி த் இடைநிலை - அ பலவினபால்விகுதி, இழைத்த இறந்தகாலப் பெயரெச்சம இழை பகுதி. பல்லார் என்பதனிறுதியில் முற்றும்மை தொகுத்தல்.

212. மாண்பு இல்லார் - நன்மைக் குணமில்லாதவர்க்கு, முனனர் - முனபு, கதன்நனறு - கோபமநல்லது, சான்றாண்மை-பொறுமையுடைமை, தீது - கெட்டது, கழிய - மிகவும, மதனநன்று - வலிமைசெய்தல்நல்லது, கோய்-களளைமுகக்குங் கருவிபோலும், வாயின் - வாயினையுடைய, கிழியாக்கு-கிழமக்களுக்கு, ஈதததுஉம்-கொடுக்கும்உணவிலும், குரைத்து எழுநத - குரைத்துக்கோபித்தெழுந்த, நாய்வாய்உள் - நாய் வாயில் (கொடுக்கும்) நல்லதசை-கொழுத்ததசையின், விதம நனறு - விதம்நலலது.

கோபித்தெழுநத நாய்க்குத்தசைகொடுத்தால் தம்வசப பட்டுநிற்கும், கீழமக்களுக்கு உணவுகொடுப்பினும் எனறு மாறுபட்டேநிற்பா ஆதலால் கதனனறு, சான்றாண்மைதீது, மதனனறுஎன்றார். கதன், மதன், தசைவிதம, சான்றாண்மை

பங்கைஞ, இது ப. தந்தொழிற்பெயர் து பகுதி, த் சந்தி, து விகுதி இது அவ்வாகுபெயராய்ப் பொருள்மேல்நின்றது. முன்னர் இடவேறு பாட்டினமேல்நின்ற இடைச்சொல் இது பெயரது தன்மைப்பட்டுநின்றது. முன பகுதி, ன சந்தி, அ பகுதிப்பொருள்விகுதி. (உகஉ)

---

## தாயுமானசுவாமிகள் பாடல்.

**213.** அங்கு - அவ்விடத்தில், இங்கு - இவ்விடத்தில் (உள்ளது) என்றபடி - என்று சொல்லாதபடி, எங்கு உம் (உம்முற்றல் மகரம் ஈறுகெட) எவ்விடத்திலும், பிரகாசம் ஆய (நீக்கமின்றிநிறைதலால்) ஒளிவடிவமாய, ஆனந்த பூர்த்தி ஆகி - ஆனந்தநிறைவாகி, அருள் ஒடு - தன் அருளொடும், நிறைந்தது எது - நிறைந்துள்ளது எதுவோ, தன் அருள் வெளிக்கு உள் ஏ - தனது அருளாகிய அண்டப்பரிடத்தே, அகில அண்டகோடி எல்லாம் - அண்டகோடிப்பரப்புகளெல்லாம், தங்கும்படிக்கு - தங்கும்படிக்கு, இச்சைவைத்து - இச்சைகொண்டு, உயிர்க்கு உயிர் ஆய (பிரமாதிபிபீலிகாந்தம் வரையிலுள்ளஉயிர்கள்தான்அறிவிக்கஅறிதலால்) உயிர்களுக்குஉயிராய், தழைத்தது எது - தழைத்துள்ளது எதுவோ, மனம் வாக்கின் இல் - மனமவாக்குகளுக்கு, தட்டாமல் - பொருந்தாமல், நின்றது எது - நின்றுள்ளது எதுவோ, சமையகோடிகள் எல்லாம் - எல்லாச் சமையகோடிகளும், தம்தெய்வம் எம தெய்வம்என்று - தமது தெய்வம் எமது தெய்வம் என்று, எங்குஉம் தொடர்ந்து - எவ்விடத்திலும் தொடர்ந்து, எதிர் (தம்முன்) எதிர்ந்து, வழக்குஇடவும் - வழக்குரைக்கவும், நின்றது எது - நின்றுள்ளது எதுவோ, எங்கண்உம் - எச்சமை

யத்திலும், பெருவழக்குஆய் - சாறாய், யாவினுஉம்-எல்லாப் பொருளிலும், வல்லஒருசித்துஆகி (இடைவிடாதுநிற்றலால்) வலிய அறிவாகி, இன்பம்ஆய் - இன்பமாகி, என்றைக்குஉம உள்ளது - எப்பொழுதும் உள்ளது, எது - எதுவோ, மேல்-தன்னிடத்து, கங்குல் பகல்அற - நினைப்புமறப்புநீங்க, நின்ற-நிலைபெற்ற, எல்லை-எல்லையில், உளது-உள்ளது, எது-எதுவோ, அது - அதுவே, கருத்திற்கு இசைந்தது - மனத்திற்கிசைந்த பொருளாயுள்ளது (ஆதலால்) கண்டனஎல்லாம் - கண்களுக்குப்புலப்பட்ட எல்லாவற்றையும், மோனஉருவெளியது ஆக-மௌனவுரு வெளித்தோற்றமாக, கருதி-நினைந்து, அஞ்சலி செய்குவாம் - வணக்கம்செய்வாம்.

அருள், இச்சைஎன்றது சத்திகளை. நாம - தோஎ. அஞ்சலி செய்குவாம் ப. வெளிக்கு சாரியை. இவ்வுருபுநான்கனுள முன்னது நிமித்தப்பொருட்டு. ஏனையிரண்டும் எல்லைப் பொருளன. ஈற்றிலுள்ளது நோக்கிப்பொருட்டு. (௨௧௩)

**214.** எத்தனைவிதங்கள் - பலவகைப்பட்ட அறிவுநூல்களை, கற்கின்உம் - கற்றாலும், கேட்கின்உம் - கேட்டாலும், என் இதயம்உம் - எனதுமனமும், ஒடுங்கஇல்லை, (விடயங் [illegible] களிற்செல்லுதலொழிந்தது) நிற்கவில்லை, யான்எனலும் ஆ[illegible] தைதான் - யானெனலும் அகங்காரமானது, என் அளவுஉ[illegible] எள்ளளவாயினும், மாறஇல்லை - ஒழியவில்லை, யாதினு[illegible] (எனதுஎனலும) எப்பொருளிலும், அபிமானம்-இடைவி[illegible] விருப்பம், என்சித்தம்மிசை-எனதுமனதினமேல், குடி[illegible] கொண்டது-நீங்காதிருக்கின்றது, ஈகையொடு - கொடுத்தலோடு[illegible] இரக்கம் (பிறவுயிர்கள்மேல்) கருணைசெய்தலையும், என[illegible] மத்துடம் - எனது [illegible] [illegible]

டேன், நியமநிஷ்டை - ஒழுக்கத்தோடு, தவம் - ஐம்புலனடக்கல் முதலியவற்றையும், விரதம் - விரதநோற்றலையும், ஒருகனவில் ஆயினும்(நானகாணும்கனவுக்களில்)ஒருகனவிலேனும், தெரிசனம் கண்டும் அறியேன் - தெரிசித்தும் அறியேன், பொய்த்த - பயனபடாத, மொழிஅல்லால் - பொய்யுரை பேசுவதேயல்லாமல், மருந்துக்கு - மருந்தினபொருட்டாயினும, மெய்மொழி - உண்மைவார்த்தையை, புகன்றிலேன் (சிறிதும்) பேசேன், பிறர்கேட்க - பிறர்கேட்டு மகிழ்க, போதிப்பது அல்லாது (அறிவுநூல்களை) போதித்தலல்லாமல், சும்மாஇருந்து - மௌனமாயிருந்து, அருள்பொருந்திடாத (உனது) திருவருளையடையாத, பேதைநான் - பேதையேன் நான் (ஆகலால் என்னைப்போல) அத்தனை - அவ்வளவு, குணக்கேடர் - குணமில்லாதவர்கள், கண்டது ஆக (உண்டென்று) கண்டதாகவும், கேட்டது ஆக - கேள்விப்பட்டதாகவும் (சொல்லும்வார்த்தை) அவனிமிசை உண்டு ஒ - உலகின்மேலுண்டோ, அண்டபகிர் அண்டம்உம் - பிரமாண்டத்தில பகுப்பாயுள்ள பலவண்டங்களும், அடங்க (தன்னுள்) அடங்க, ஒரு நிறைவுஆகி - ஒப்பில்லாதவியாபகமாய், ஆனந்தம்ஆன - பேரின்பசொரூபமான, பரம்ஐ - மேலானபொருளை, சொல்லாய் - கூறுவாய் (நீ அருள்வாய் என்றபடி).

அண்டம் பிரமாண்டம். பொய்த்த பெயரடியாகப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம் பொய் பகுதி, த் சந்தி, த் இறந்தகாலவிடைநிலை, அ எச்சவிகுதி. (உகச)

215. தந்தைதாய் தமர்தாரம் மகவுஎன்னும் - தகப்பன் தாய்உறவினர் மனைவிபிள்ளைகளென்றுசொல்லப்படும், இவை எல்லாம் - இப்பொருள்க ளெல்லாம், சந்தையில் கூட்டம்

(நிலையில்லாமையால்) சந்தையிற்கூடிய கூட்டமாம், இதுவல் ஓ - இவ்வாய்மொழியிலோ, சந்தேகம்இல்லை - ஐயமில்லை, மணி - இரத்தினமயமாகிய, மாடம் மாளிகைமேடை-மாடங்களும் மாளிகைகளும் அதனுள்மேடையும், சதுரங்கசேனையுடன் ஏ-நால்வகைச் சேனைகளுடனே, வந்த ஓர் வாழ்வு உம் - வந்ததாகிய ஒப்பில்லாத அரசவாழ்க்கையும், இந்த்ரசாலககோலம் - தோன்றிமறையும விசித்திரமாம், வஞ்சனை பொருளைமலோபம்வைத்த-வஞ்சமும்பொருளைமயும் உலோபமும் நிலைபெற்ற, மனம்ஆம் கிருமி - மனமாகிய புழுக்கள், சேர்ந்த மலபாண்டம் ஓ - நெருங்கியமலபாத்திரமாகிய இச்சரீரமோ, வஞ்சனை இலாதகனவு - பொய்யாத சொப்பனமாம், எந்தநாள்உம்-எந்நாளும, சரிஎன (இவை இவற்றிற்கு) ஒப்பென்று, தேர்ந்துதேர்ந்துஉம் - ஆராயாதிருந்தும், இரவு பகல் இல்லாதஇடத்து-கேவலசகலம அற்றஇடத்தில், ஏகம் ஆய்நின்ற - இரண்டென்பது அறநின்ற, நின்அருள் வெளளம்மீதில் - உனது திருவருட்பிரவாகத்தின்மேல், யான்என்பது அறஉம் - யானென்னும அகங்காரநீங்கவும், மூழ்கி-குளித்து, சிந்தைதானதெளியாது - மனந்தெளியாமல், சுழலும் வகை என்கொல் ஓ - சுழலும்வண்ணம யாதோ (அறியேன்) தேடுஅரிய - தேடுதற்கரிய, சத்துஆகி-உண்மையாகி, எனசித்தம்மிசை - என்மனத்தின்மேல், குடிகொண்ட - நீங்காதிருந்த, அறிவு ஆனதெய்வம் ஏ-சித்தாயுள்ள தெய்வமே, தேசோமயம் - பிரகாசமயமாகிய, ஆனந்தம் ஏ-ஆனந்தவடிவாயுள்ள பொருளே (நீ யருள்வாய்).

இதனால் சத்து, சித்து ஆனந்தம் எனப் பரசிவத்தின திருவுருவங்கூறினார். தந்தை முறைபெயர் தாம் பகுதி,

சையுமெய்யுமானபதற்கு நல்லொழுக்கும் வாய்மையும என்ப பொருள் கொள்ளினும் அமையும். கு உருபுமயக்கம் பொய்யனேன் பண்படியாகபிறாத தன்மையொருமைப் பெயர்ச்சொல பொய் பகுதி, ய் சந்தி அன் சாரியை, ஏன் தன்மையொருமைவிகுதி. (உகஎ)

218. சோதியே (அடியவர் தரத்துக்கேற்பச்சூரியர் சந்திரர்போலும்) ஒளியுள்ளவனே, சுடரே (நட்சத்திரம்போலும்) ஒளியுள்ளவனே, சுகமே (இன்பந்தந்துநிற்றலால்) இன்பவடிவாயுள்ளவனே, துணைநீதியே - துணையாயுள்ள நீதியாயுள்ளவனே, நிசமே (என்றும்ஒருபடித்தாயிருத்தலால்) உண்மைவடிவாயுள்ளவனே, நிறைவே (எங்கும்) நிறைந்துள்ளவனே, நிலைஆதியே (பிரமன்முதலியோர்க்கு மூத்திருத்தலால்) நிலைத்தமுதலாயுள்ளவனே, உன்னை யான் அடைந்தேன் - உன்னை யான் அடைக்கலமாகஅடைந்தேன், அகம்வாதியாது - அகங்காரம் என்றுசேர்செய்யாது, அருள்வான் ஐ-உனதுதிருவருளாகியவெளியை, அருள்வாய்-அருள்செயவாய்.

219. எனது அனை ஒப்பு ஆம் - எனது தாயை யொப்பாகிய, அன்னே - தாயாயுள்ளவனே, இரும்பு ஐ - இரும்பினை, காந்தம் இழுக்கின்றஆறு - காந்தம் இழுக்கும் விதம்போல, என்னை திரும்பிபாரக்க ஒட்டாமல் - என்னையான் திரும்பிப் பாராதவண்ணம், திருஅடிகரும்பு ஐ (தன் வசப்படுத்தும்) உனது திருவடியாகிய கரும்பினை, தந்து-அருளி, கண்நீர் கம்பலை - கண்ணீர் மிகுதியோடு, எல்லாம் அரும்ப-உடம்பெல்லாம் புளகரும்ப, செய் - அருளசெய்வாய்.

தன்னைத்தான் திரும்பிப்பார்த்தலாவது பகிர் முகத்தில் விட்ட வாசனை வர்த்தார்க்கல்.

**220.** சொல்லற்கு அரிய (இத்தன்மையனென்று) வாக்கா லளவு செய்தற்கு முடியாத, பரம்பொருளே - மேலான பொருளே, சுகவாரிதியே (என்றுங் குறைபடா திருத்தலால்) பேரின்பசமுத்திரமே, சுடர் கொழுந்தே (ஒளிமிகுந்தொளி யாய் நிற்றலால்) பிரகாசத்தின் கொழுந்தே, வெல்லற்கு அரிய - ஒழித்தற்குமுடியாத, மயலில் - பிரபஞ்சமயக்கில், என்னைவிட்டு - என்னையிருத்தி, எங்கு ஒளித்தாய் - எங்கே மறைந்தாய், ஆ கெட்டேனா - ஐயோகெட்டேன், கல்லில - கருங்கல்லில், பசிய நார்உரித்து - ஈரமுள்ள நாரையுரித்து, கடுகுஇல் - கடுகினிடத்தில், பெரியகடலை அடைக்கும் - பெருங் கடலையடைக்கும், அல்இல் - இருள்பொழுதில், கரிய - கருநிற முள்ள, அந்தகனார்க்கு - யமனார்க்கு, ஆளா ஆக்கினையோ - ஆட் படுத்தினையோ, அறியேன (யான்) அறியேன்.

அரியசெயலும் செய்யவல்லவன் என்பார் கல்லிற்பசிய நாருரித்துக் கடுகிற்பெரிய கடலடைக்குமென்றார். இல்லுருபு மூன்றனுள் முன்னைய இரண்டும் இடப்பொருளில்வந்த ஏழாமுருபுகள் - பின்னது ஒப்புப்பொருளில்வந்த ஐந்தாமுருபு.

முற்றிற்று.

---